ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

வால்மீக ராமாயண யுத்தகாண்டத்தில்

# ராவண சம்மார

## நாடகம்







ஸ்ரீ - முனிசாமி முதலியார் பாரியாள்

ஸ்ரீ - அம்மணி அம்மாளிடம்

சர்வ சுதந்திரம்பெற்று,

---

சென்னை:

**B. இரத்தின நாயகர் & ஸன்ஸ்,**

அவர்களால்,

கள்விலாச அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

---

[விலை அணா 6.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

வால்மீக ராமாயண யுத்தகாண்டத்தில்

# இராவண சம்மார நாடகம்

இஃது,
கூடலூர் தாலூக்கா திருப்பாதிருப்புலியூர்
ம-ா-ா-ஸ்ரீ, அதிகப்ப - வீ. சோமசுந்தர செட்டியார்
மாணாக்கரிலொருவரும்
ஷை. தாலூக்கா தூக்கணம்பாக்கம் கந்தமாரிஷி கோத்திரம்
பாவாடைகிராமணி குமாரர்
ம-ா-ா-ஸ்ரீ,
நடேசகிராமணியாரால் இயற்றியதை

---

சூளை-முனிசாமி முதலியார் பாரியாள்
அம்மணி அம்மாளிடம்
சர்வ சுதந்திரம்பெற்று,

---

சென்னை

**B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,**

அவர்களால்,
திருமகள்விலாச அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

---

காபிரைட்] 1940 [அணா 6.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# இராமாயண வசன ஸாரஸங்கிரகம்

# பாலகாண்டம்

சிறப்புப்பொருந்திய தேவகுழாங்கள் அஸுரர்களின் கொடுமையை சகியாதவர்களாய் இந்திரனிடம் முறையிட, ஜராணிக் கேள்வன்மனம்நொந்து நான்முகனிடம் முறையிட, நான்முகனும் இந்திரனும் தேவர்கூட்டங்களும் ஒன்றாகச்சேர்ந்து க்ஷீராப்திநாதனிடம் முறையிட்டார்கள். அவர்களின் வேண்டுகோளுக்கிரங்கிய நாராயணன் திருவுள்ளமுவந்து அஸுரரை ஸம்ஹரிக்கும் பொருட்டு யானே திருவயோத்தி தசரதசக்கிரவர்த்தியார்க்கு திருக்குமார ஸ்ரீராமனாகவும் லக்ஷ்மியே மிதுலையில் ஜனகனுக்கு திருமகளாகவும் அவதாரஞ் செய்யப்போவதாய் சொல்லி, தேவர்களைநோக்கி நீங்கள் வானரங்களாக அவதாரஞ் செய்யுங்கோளென கட்டளையிட்டு மறைந்தருளி, தானே ஸ்ரீராமனாகவும், சக்கரமே பரதனாகவும், ஆதிசேஷனே இலக்ஷ்மணனாகவும், சங்கே சத்ருக்கனாகவும், லக்ஷ்மியே ஜானகியாகவும் திருவவதாரஞ் செய்தருளினார்கள். அறுபதினாயிர வருஷம் அரசுபுரிந்து தன்னரசை பின்னாள புத்திரபேறில்லாமல் மனம்வருந்திய தசரதசக்கிரவர்த்தி வஸிஷ்டரால் கலைக்கோட்டு முனிவரிடந் தெரிந்து அன்னவரால் புத்திரகாமேஷ்டி யாகஞ்செய்து அதனால் புத்திரப்பேற்றையடைந்து இன்புற்றிருக்கையில், முனிவர் நாயகமாகிய கோசிகன் தன் யாகம் பூர்த்தியாகும் பொருட்டு ஒருநாள் அயோத்தியையடைந்து சுரதனைவேண்டி யழைத்துச் சென்றான். ஸ்ரீராமன் இலக்ஷ்மணன் போகும்வழியில் தாடகையைக் கொன்று அவள் புத்திரரான மாரீசனையோட்டி, சுவாகுவைக் கொன்று கோசிகன் யாகத்தைப் பூர்த்திசெய்து கொடுத்தார்கள். யாகம் பூர்த்தியானதும் முனிவன் இவர்களை மிதுலைக்கு அழைத்துச்செல்லும் வழியில் ஸ்ரீராமன் அகலிகையையின் சாபந்தீர்த்து, மிதுலையைச்சேர்ந்து ஜனகனைக்கண்டு அவனால் வைத்துள்ள சிவதனுசையொடித்து, ஜானகியைமணந்து, அயோத்தியை நாடிப் போகும்வழியில் ஜமதக்கினி குமாரனான பரசுராமனை பணியச் செய்து திருவயோத்தியை அடைந்தார்.

தசரதன் தன் குமாரனான ஸ்ரீராமனுக்கு அயோத்திமாநகரத்தை முடிசூட்டக் கருதி வஸிஷ்டரிடம் யோசிக்கையில் வஸிஷ்டர்

ஸ்ரீநாராயணனே இராவணனை சம்மரிப்பதற்காக ராமனாக அவதாரஞ் செய்ததையோசித்து ராமனை வெளிப்படுத்தவேண்டுமென்ற எண்ணத்தால் தசரதனை நோக்கி உன்குமாரனை ஸ்ரீராமனுக்கு முடிசூட்ட நாளையே நல்லநாள் என்று கூறியருளினார். இதைக் கேட்ட தசரதன் வசிஷ்டருடைய வார்த்தையை ஆமோதித்து, நாளையே முடிசூட்டும் நாளென பறையறைவிக்கும்படி யாக்கியாபித்தான். இதைக்கேட்ட அயோத்திமா நகரக்குடிகள் ஆனந்தசாகரத்தில் மூழ்கினவர்களாய் ஸ்ரீராமபிரான் மகுடாபிஷேகத்தை கண்ணுறும்பொருட்டு தத்தம் மாளிகைகளையும் வீதிகளையும் அலங்கிருதம் செய்யலானார்கள். இவையனைத்தையும்கேட்டும் கண்டுமிருந்த கைகேசியின் தாதியாகிய மந்தரையென்னும் கூனியானவளுக்கு மனந்தடுமாறி கைகேயின் அந்தப்புரமணுகி, ஸ்ரீராமனுக்குப் பட்டம் நிகழ்த்தாமலிருக்கும்படி யவளைத்தூண்டி, சம்ராசுர உயித்தியத்தில் அரசன் அவளுக்குக் கொடுத்திருக்கும் இரண்டு வரத்தினால் தசரதனை மயக்கி காரியத்தை முடிக்கும்படிச் சொல்லிப்போயினாள். அவ்வாறே தசரதனை கைகேயி மயக்கி, ஒருவரத்தால் ராமன் பதினான்காண்டு வனமேகவும், ஒருவரத்தால் தன் மகனாகிய பரதன் நாடாளவும் கேட்டு வரம்பெற்று, ஸ்ரீராமனை யழைத்து அரசன் ஆக்கினையின்படிச் செய்வாயென்றியம்பினாள். பாராபரிக்கவும் சிற்றன்னையின் வார்த்தையைச் செவியுற்ற ஸ்ரீராமன் ஜடைமுடியுடன் புறப்பட இவரோடு ஸ்ரீஜானகியும் இலக்ஷ்மணரும் புறப்பட்டு ஆக மூவருமாக அயோத்தியைவிட்டகன்று கங்கையையடைந்து வேடுவர் கோமானாகிய குகப்பெருமானை சிநேகித்து அவரால் கங்கையைக் கடந்து பரத்துவாசர் ஆசிரமம் அடைந்தார்கள். பரத்துவாசரால் ஆசிபெற்று சித்திரகூடபர்வதம் போய்ச்சேர்ந்து மூவருமாய் வாழ்ந்து வந்தார்கள். ஸ்ரீராமன் பிரிவால் மூர்ச்சித்து வீழ்ந்த தசரதன்பால், ஸ்ரீராமபிதாரத்தோடும் தம்பியோடும் அயோத்தியைவிட்டு ஆரண்யம் போய்விட்டாரென்று மந்திரிசுமந்திரரால் சொல்லக்கேட்டதும் தசரதன் விண்ணுடைடைந்தான். இச்செய்தியை வசிஸ்டர் கேகயநாட்டிற்கு சென்றிருக்கும் பரதனுக்கறிவித்து அவனால் அரசனுக்குரிய ஈமக்காரியங்களை நடாத்தி அயோத்தியை யாள்வாயென், அதற்கிணங்காது மனங்கொதித்து மன்னவன் குமாரனை தன் தமையனையழைத்து வருவதாகச்சொல்லி, எல்லோரும் புறப்பட்டு கங்கையைக்கடந்து பரத்துவாச முனிவரால் அண்ணன் இருப்பிடந் தெரிந்து, சித்திரபர்வதத்தில் ஸ்ரீராமனைக்கண்டு, நடந்தவையெல்லாம் சொல்லி நாட்டையாள வழைத்தார். அவற்றிற் குடன்படாததை யறிந்த பரதன் மனம் வருந்த, அசரீரியின் வார்த்தையால் ஸ்ரீராமபிரானுடைய பாதுகையைப்பெற்று அயோத்தி சமீபமாயுள்ள நந்திகிராமம் என்னும் ஓரிடத்தில் பாதுகையைவைத்து பூசித்துக்கொண்டு ஓர் அடிமைப்போல் விளங்கிவந்தான்.

## ஆரண்யகாண்டம்.

பரதாழ்வான் சென்றதும் ஸ்ரீராமர் சித்திரகூட பர்வதத்தை விட்டகன்று அத்திரிமுனிவரைக்கண்டு அன்னவரால் உபசரிக்கப் பெற்று, அவரைக்கடந்து அப்பால் செல்லுகையில் விராதனென்னும் கொடிய அரக்கனை சம்மரித்து, சரபங்கமுனிவருக்குக் காக்ஷி தந்து அவர் ஜோதியில் மறைந்ததும் அவரைவிட்டு அப்பாற் செல்லுங்கால் அகஸ்தியபெருமானைக் கண்டு அவராசிபெற்று அவரால் கொடுக்கப்பட்ட வில்லையும் அம்பையுங் கைக்கொண்டு, பஞ்சவடிக்கு போகும்வழியில் ஜடாயுக்கு கானைக்கண்டு அவரோடு சிநேகித்து பஞ்சவடியில் வாசஞ்செய்து வந்தார்கள்.

இங்ஙனம் நிகழ்ந்து வருங்கால், சூர்ப்பனகியென்னும் அரக்கி தோன்றி இவர்களை யிச்சிக்க அதற்கொவ்வாது அவளை திரிபங்கஞ்செய்தார்கள். அதற்கவள் ஓலமிட்டு கரதூஷணுளிடம் முறையிட, அவ்விருவரும் சண்டைக்கு வந்தார்கள். அவர்கள் எல்லோரையும் ஸ்ரீராமபிரான் தன் கைபாணத்தினுல் அந்தகனுட்டுக் கனுப்பிவிட்டார். இதனைக் கண்ட சூர்ப்பனகி அண்ணனுகிய இராவணனிடஞ் சென்று நிகழ்ந்தவை யாவையுஞ் சொல்லி, சீதையின் அழகைப்பற்றியுங் கொஞ்சமெடுத்துக் கூறினுள். இராவணன் சீதையின் மோகத்தால் மனம் வருந்தி, சீதையை அபகரிக்கும் மார்க்கத்தைக் கருதி, மாரீசனிடம் வந்து சங்கதிகளைக்கூறி மாயமானுகப் போகும்படிக் கட்டளையிட, இதைச் செவியுற்ற மாரீசன் அனேக நீதிமொழிகளைக் கூறியுங் கேளாது கோபித்ததால், உடனே மாரீசன் ஓர் அழகிய மான் உருக்கொண்டு ஜானகி முன் விளையாடினுன். அம் மானைக்கண்ட ஸ்ரீஜானகி அதைத் தன் நாயகனுக்குக் காட்டி பிடித்துத் தரும்படி வேண்ட, அவள் வார்த்தைக்கிணங்கிய ராமனை லக்ஷ்மணன் தடுத்துங் கேளாமல், தம்பியை ஜானகிக்குக் காவல் வைத்துவிட்டு, தான் மானைத் துரத்திச் செல்லுங்கால், மான் கைக்கு கிட்டாததைக்கண்டு அம்பை யெய்ய, அம்பால் அடிப்பட்ட மாரீச மான் இலட்சுமணு அபயம்! என்று கீழே வீழ்ந்திறந்தான். அரக்கனுகிய மாரீசனிட்ட ஓசையைக் கேட்ட ஸ்ரீஜானகி வருந்தி இலக்ஷ்மணனை யேகச்சொல்ல, இவ்வோசை சூதாகதோணுது அண்ணனுடைய ஓசையல்ல நீ வருத்தப்படாதேயென்று தேறுதல் சொல்லி அண்ணனிடஞ் சென்றுர். அதுசமயம் இராவணன் சந்நியாசிக் கோலங்கொண்டு சீதையை அபகரித்துச் சென்றுன். ஸ்ரீராமரும் இலக்ஷ்மணருஞ் சந்தித்து திரும்பி பர்னகசாலையில் வந்து பார்க்க சீதை காணுமையால் மனம் வருந்தி தேடிச்சென்றுர்கள். இராவணன் ஸ்ரீஜானகியைக் கொண்டுபோகும்போது ஜடாயு கண்டு அவனேடு சண்டைசெய்து கடைசியாக இராவணனுல் அடிப்பட்டுக் கீழே வீழ்ந்து மூர்ச்சையடைந்தார். இராமலக்ஷ்மணர்கள் தேடி

வரும்வழியில் அடிபட்டுக் கிடக்கும் ஜடாயுவால் சங்கதிகள் தெரிந்து அவரை தகனம் செய்துவிட்டு, ஸ்ரீஜானகியை தேடிவருங்கால் கபந்தனென்னும் இராக்கதனைக் கொன்று அவனால் சபரீ மூதாட்டியிருக்கும் இடந்தெரிந்து அவளைக் கண்டு அவள் பூசையை யேற்று சூரியகுமாரனான சுக்ரீவனைக்காண கிஷ்கிந்தையை நாடிப் போயினார்கள்.

## கிஷ்கிந்தாகாண்டம்.

இந்திரகுமாரனான வாலியின் பயத்தால் ரிஷிஸ்ருங்கமலையிலிருக்கும் சுக்ரீவன், அநுமான், ஜாம்புவந்தன் முதலான வானரங்கள் ஸ்ரீராமபிரான் வருகையைக் கண்டு பயந்து அநுமானை தூதாக அனுப்பி பின்னால் சுக்ரீவன் ஸ்ரீராமபிரானோடு சிநேகித்தும் வாலியைக் கொல்லுவதாக ஸ்ரீராமபிரான் வாக்களித்தார். வாலியின் கோட்டையை நாடிப்போகையில் வழியிலிருந்த துந்துபியின் எலும்பை இலக்ஷ்மணன் காலால் எடுத்தெறியச்செய்து, மராமரங்கள் ஏழையும் ஒரே பாணத்தினால் துளைத்து, வாலியோடு சுக்ரீவனை சண்டைசெய்யவிட்டு, தான் மறைந்திருந்து வாலியின்மேல் பாணப்பிரயோகஞ்செய்து அவனை விண்ணாட்டிற் கனுப்பி சுக்ரீவனுக்கு இலக்ஷ்மணனைக்கொண்டு கிஷ்கிந்தையைப் பட்டங்கட்டியருளினார். மாரிகாலஞ் சென்றபிறகு ஸ்ரீஜானகியைத் தெரிந்து வரும்படியாக அநுமானை வரவழைத்து அவரிடம் ஸ்ரீஜானகியின் அழகைக்கூறி அடையாளமுங் கொடுத்தனுப்பினார்.

## சுந்தரகாண்டம்.

இதைப்பெற்ற அநுமான் தன் பரிவாரங்களோடு மயேந்திரகிரியையடைந்து ஸ்ரீ ராமஸ்மரணை செய்யுங்கால், அங்கு சூரிய வெப்பத்தினால் சிறகெரிந்து வீழ்ந்துகிடந்த சம்பாதியென்னும கழுகுக்குச் சிறகு வளர்ந்து, சம்பாதியால் இலங்கையிருக்கு மிடந்தெரிந்து அநுமான் மற்றவர்களை அங்கேயே வைத்துத்தான் விஸ்வரூபங்கொண்டு இலங்கைக்குள்ளே தாவினார். இலங்கையினுள்ளே பிரவேசிக்குங்கால், அங்கு காவலாயிருந்த இலங்கணியென்னும் அரக்கப்பேயை அவ்வாயிலுக்கு பலியிட்டு உள்ளே பிரவேசித்து அனேக இடங்களிற்றேடியும் காணாது கடைசியாக அசோகவனத்தில் ஸ்ரீ ஜானகிபிராட்டியைக் கண்டு சந்தேகித்து நிற்குங்கால், இராவணன் தோன்றி தன்னைக் கூடும்படிவேண்ட, ஸ்ரீஜானகி அவனைத் துரும்பாக மதித்து பலவாறாக இகழ்ந்து பேசியதைக்கண்ட சதகண்டன் கோபங்கொண்டு தன்னந்தப்புறம்போய் விட்டான். சந்தேகம் நீங்கிய அனுமான் ஸ்ரீ ஜானகிபிராட்டியாரோடு வார்த்தையாடி அடையாளத்தை தேவிக்குக்கொடுத்த, தேவியால் கொடுக்கப்பட்ட சூடாமணி யெனுமோர் பொருளைப்பெற்று, அசோகவனத்தை

யழித்து அரக்கக் கூட்டங்களை யொழித்து, இந்திரஜெயித்துவின் பிர்மாஸ்திரத்தினல் கட்டுண்டு இராவணன் சபையைநாடி அவனிடம் சம்பாஷித்து பிறகு அவனல் வாலிலிட்ட தீயைக்கொண்டு அந்த இலங்கையை எரித்துக் கடலைக்கடந்து மயேந்திரமடைந்தார். அங்கு தன்னைச்சார்ந்த எல்லோரையு மழைத்துக்கொண்டு ராமபிரான் பாலடைந்து, ஸ்ரீ ஜானகிபிராட்டியால் கொடுக்கப்பட்ட சூடாமணி யடையாளத்தைக் கொடுத்து எல்லோரும் தென்றிசையைநாடி கடற்கரையைய ணுகி வருண னுடைய உதவியால் கடலைக் கடக்க நிச்சயித்து ஸ்ரீராமபிரான் வருணமந்திரத்தை ஜெபித்தருளினர். இலங்கையில் அனுமானுக்கிட்ட தீயினல் பட்டணம் இழந்ததையும், தன் சோதரனுகிய தசக்ரீபன் மூடமதியினல் ஸ்ரீ ஜானகிபிராட்டியை சிறைவைத்திருப்பதையும் கண்ட விபீஷண ஆழ்வான் மனந்தளர்ந்து அண்ணனுகிய இராவணனுக்கு அனேக நீதிகளைப் புகட்ட அவற்றைக் கேளாது தம்பியாகிய விபீஷணன்மீது கோபங்கொண்ட ராவணனை நிந்தித்து தான் தன் மந்திரிமாரோடு ஸ்ரீ ராமபிரானை சரணமடையவெண்ணி விபீஷணன் தென்கரைசேர்ந்து அபயக்குரலிட அவற்றைச் செவிசாய்த்த ஸ்ரீராமபிரான் அனுமாரால் விபீஷண னுடைய பேருதெரிந்து அவனுக்கு அபயமளித்து இலங்காபுரியை அவனுக்கு முடிசூட்டுவதாக வாக்களித்து வர்ண னுடைய உதவியால் சேதுகட்டி சுவேதமலையை யனுகினர்கள்.

## யுத்தகாண்டம்.

இராவணனிடம் அங்கதனை தூதனுப்பியும் பயன்படாததைக் கண்ட ஸ்ரீராமபிரான் இலங்கைக்கோமானிடம் முதல்நாள் யுத்தஞ்செய்து அவனை முறியவடித்து நாளையதினம் யுத்தத்திற்கு வரும்படி கட்டளையிட்டு அதிகாயன் முதலாயினேரை தன் பாணக்கினியால் தீட்டி நமனுலகமனுப்பினர். இரண்டாவதுநாள் இராவணன் குமாரனை இந்திரஜெயித்தென்பவன் இலக்ஷ்மணரோடு யுத்தஞ்செய்து நாகபாசத்தால் ஸ்ரீ ராமபிரான் நீங்க மற்றெல்லோரையுங் கட்டிவிட்டுச்சென்றுன். தம்பிமுதல் வானரப் பராக்கிரமசாலிகள் யாவரும் நாகபாசத்தால் கட்டுண்டு மூர்ச்சித்திருப்பதைக் கண்ணுற்ற ஸ்ரீ ராமபிரான் வருந்திநிற்கையில் கருடபகவான்தோன்றி ஸ்ரீ ராமரை ஸ்தோத்தரித்து நாகபாசத்தை யகற்றிச்சென்றுர். இதை யறிந்த ராவணன் மறுநாள் யுத்தத்திற்கு இந்திரஜெயித்தை தூண்ட அவனேடு லக்ஷ்மணர் யுத்தஞ்செய்துக் கொண்டிருக்குந் தருவாயில் மேகத்தில் மறைந்து பிர்மபாசத்தினல் யாவரையுங்கட்டி மூர்ச்சையாகும்படி செய்துவிட்டுப் போனன். இவற்றைக்கண்ட ராவணன் சந்தோஷமடைந்து சுகசாரணர்களை நோக்கி அரக்கர் பிணங்கள் யாதுமில்லாமல் எங்குபார்த்தாலும் குரங்குப் பிணங்களாக இருக்கும்படிச் செய்வித்து ஸ்ரீ ஜானகியை புஷ்பவிமானத்தி லேற்றிக்

கொண்டு ரணகளத்தைக் காட்டிவரும்படி யாக்யாபித்தான். அஸ்திரபூசை செய்யச்சென்ற ஸ்ரீ ராமபிரான் பூசைமுடிந்ததும் யுத்தகளத்திற்குவந்து பார்வையிட்டு இருளாகவிருப்பதை நோக்கி ஆக்கினு அஸ்திரத்தினுல் இருளையகற்றிப் பார்க்க எல்லோரும் மூர்ச்சையிலிருப்பதைக் கண்ணுற்று தானும் மனம்வருந்தி மூர்ச்சையாயினுர். அரக்கர் குழாங்கள் ஸ்ரீ ஜானகியை புஷ்பவிமானத்திலேற்றிக்கொண்டு யுத்தகளத்தில் வந்திறங்கினுர். அங்கு ஸ்ரீ ராமபிரான் முதலாயினேரைக் கண்ணுற்ற ஜானகி அடங்காதுக்கத்திலாழ்ந்தி வருந்தியழவே எல்லா உலகங்களிலுள்ள மாதர்களுமழுதார்கள். சதா கொடூர குணமுள்ள அரக்கியர்களும் அழுதார்கள். பின்பு சத்தியசம்பன்ன பரதாழ்வான் புத்திரியாகிய திரிச்சடைதேற்ற ஒருவாறு தேறி யெல்லோரும் அசோகவனம்போய்ச் சேர்ந்தார்கள். சைனியங்களுக்கெல்லாம் கனிவர்க்கங் கொண்டுவரச்சென்றிருந்த விபீஷணன் ரணகளத்தையுற்றுப்பார்த்து எல்லோரும் மூர்ச்சித்துக் கிடக்கக்கண்டு மனம் வருந்தி சாம்புவந்தரைக்கண்டு அவரால் ஆஞ்சநேயரைக்கொண்டு சஞ்சீவிமலையைத் தருவித்து எல்லோரையும் உயிர்பித்தெழுப்பியருளினுர்.

இதைக்கேட்ட ராவணன் சிந்தாகுலத்தனுய் கும்பகர்னலையேவினுன். அவனுடன் ஸ்ரீராமபிரான் யுத்தத்தில் வாதாடிமாய்த்தார். கும்பகர்ணன் மடிந்ததைக்கேட்ட ராவணன் மனம்பொருந்தி தன் குமாரனை இந்திரஜயித்தை நிகும்பலை யாகத்திற்கனுப்பினுன். அவன் சூட்சியால் மாயாசீதையென்னும் ஓர் அசத்தாகிய உருவைச்செய்து அவளைக் கட்டியவண்ணமாக அநுமான்முன்தோன்ற அவர்கள் சீதைமீது நாடும்போது அவளை வெட்டிவிட்டு இன்னும் அயோத்தியிலுள்ள எல்லோரையுங் கொல்வேனெனக்கூறி அங்கு போவதுபோல் வழிகாட்டி மறைந்தான். இதனைக்கண்ட அனுமான் ஹா! தாயே!! சீத!!! என்றலறிவீழ்ந்து மூர்ச்சித்தார். இந்திரஜெயித்து நிகும்பலையை நாடி யாகஞ்செய்து வந்தான். மூர்ச்சை நீங்கிய அனுமான் ஸ்ரீராமபிரான் முன் ஓடி நிகழ்ந்தவைகளையுரைத்தார். அதனை செவியுட்கொண்ட எம்பிரான் மனங்கலங்கினுர். இதனைக்கண்ட விபீஷணன் ஸ்ரீராமபிரான் முதலெல்லோரையுஞ் தணியச்செய்து தான் வண்டு ரூபமாகி லங்கைக்குச்சென்று அங்கு நடந்தும் நடக்கும் விஷயங்களை தெரிந்துக்கொண்டு வந்து ஸ்ரீராமபிரானிடம் அவர்கள் செய்துள்ள சூட்சிகளை தெரிவித்து நிகும்பலையை யழிக்க லக்ஷ்மணருடன் செல்ல லக்ஷ்மணர் யாகத்தையழித்து இந்திரஜெயித்தை எமபுரியடையச்செய்தார். இந்திரஜெயித்து இறந்ததைக்கேட்ட ராவணன் புத்திரசோகத்தால் மிகவும் நலிந்து கடைசியாகி மூலபலத்தை ஸ்ரீராமன் மீதேவினுன். அதையும் ஸ்ரீராமபிரான் ஒழித்தருளினுர். அதைக்கண்ட ராவணன் தான் இராதரூடனுய் புறப்பட்டு ஸ்ரீராமபிரானேடு யுத்தஞ்செய்து கடைசியாக

ஸ்ரீராமபாணத்தால் தன்னுயிரைத் துறந்தான். உடனே அவன் மனைவிகளாகிய வண்டோதரி தாணியமாலை என்னுடைய பரஸ்திரீகள் தன் நாயகன்மீது சாய்ந்து சோகமுற்று விண்ணுடடைந்தார் இதைக்கண்ட விபீஷணுழ்வான் தமையன் முதலானோர் இறந்ததைப் பற்றி துக்கப்பட்டுப் பிறகு அவர்களுக்குரிய ஈமக்கடனை முடித்துவிட்டு, இளையபெருமாளால் இலங்காபுரியை முடிசூட்டப் பெற்றுக்கொண்டு ஸ்ரீராமபிரான் திருவடிகளைப் பணிந்தார். திருவடிகளில் வீழ்ந்த விபீஷணுழ்வானுக்கு ஆசிகூறி, உடனே அயோத்திக்குப் போக உத்தேசித்து ஸ்ரீ ஜானகி முதல் எல்லோரும் புஷ்பவிமானத்திலேறிப் புறப்பட்டார்கள்.

## மீட்சிகாண்டம்.

நந்திகிராமத்தில் ஜடைமுடியுடன் அன்ன ஆகாரமின்றி ஸ்ரீராம நாமமே தியானமாகவிருந்த பரதநம்பியானவர் வசிஷ்டரை யழைத்து ஸ்ரீராமபிரான் வரும்நாளை கணக்கிட் டறிந்துச் சொல்லுமென்ருர். வசிஷ்டர் இந்நாள்தானெனக்கூற கேட்ட பரதநம்பியானவர் அண்ணனுகிய ஸ்ரீராமபிரானுக்கு இன்னும் கருணைவரவில்லையெனக் கருதி, சத்ருக்கனை யழைத்து அயோத்தியை யாள்கவென்றியம்பி, அயோத்திப் பிரஜைகள் யாவரும் துக்கத்திலாழ்கவும், தாய்மார்கள் கூவியழவும் அக்கினிக்குழியை ஏற்படுத்தி அதில் வீழவனுகினுன். ஸ்ரீஜானகி சமேதராமபிரான் புஷ்பவிமானத்தின்மீது எல்லா சைன்யங்களும் புடைசூழ பரத்துவாசமுனிவர் ஆசிரமம் வந்தார்கள். பரத்துவாசரால் அயோத்தியின்கண் பரதநம்பிகளுடைய தலைமையை யெடுத்தோதக்கேட்ட ஸ்ரீராமபிரான் மாருதியை யழைத்து அடையாளமாக தனது கணையாழியைக் கொடுத்து தாம் வருவதாகவும் அக்கினியில் வீழமென்றும் கூறும்படி அனுப்பினுர். அவ்வாக்கினையை சிரமேற்கொண்ட வாயுபுத்திரர் திருவயோத்தியையடைந்து, நந்திகிராமத்தில் அக்கினியில்வீழப்போகும் பரதநம்பிகள் செவியில் விழுமாறு வந்தான் ஸ்ரீராமன் என்ற பதத்தை முன்னேதி, அவர்கள் வருகையைக்கூறி யருளினுர். கேட்ட பரதநம்பிகள் ஆரவாரித்து உள்ளம்பூரித்து எல்லோருக்குந் தெரியப்படுத்தி திருவயோத்தியை அலங்கிருதஞ்செய்து பாதுகையுடன் ஸ்ரீராமபிரானை எதிர்கொள்ளச் சென்ருர். பரத்துவாசரின் உபசரணைகளைப்பெற்று கங்கைக்கரையை யடைந்து வேடுவ தலைவனை குகப்பெருமானை கடாக்ஷித்து அவரையும் அழைத்துக்கொண்டு திருவயோத்தியை நாடிவரும் ஸ்ரீராமபிரான், மாசுபடிந்த மேனியனுய் பாதுகையுடன் வரும் பரதநம்பிகளைக் கண்டதும் புஷ்ப விமானத்தை இறக்கி தன்னுயிர்போன்ற தம்பியைத் தழுவி எல்லோருங் கொண்டாடும்படி நந்திகிராமம் போய் தவவேடத்தை மாற்றி இராஜவேடங்கொண்டு திருவயோத்திக்கு எழுந்தருளினுர்கள். வசிஷ்டமுனிவர்

ஸ்ரீராமபிரானுக்கு திருமுடிசூட்ட சுபதின மேற்படுத்தி ஸ்ரீராம பிரானுக்கு ஸப்ததீர்த்தங்களால் திருமஞ்சனமாட்டி முப்பத்து முக் கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிர ரிஷி புங்கவர்கள்சூழ அங் கதப்பெருமான் உடைவாளேந்த அஞ்சனைத் திருக்குமாரர் சிம்மா தனந் தாங்க இலக்ஷ்மணர் சத்ருக்கன் வெண்சாமரைவீச பரதர் வெண்குடைப்பிடிக்க ஸ்ரீஜானகி யருகிலிருக்க சர்வலோகங்களும் போற்ற வசிஷ்ட மகாமுனிவர் ஸ்ரீராமபிரானுக்கு திருவயோத் தியை திருப்பட்டாபிஷேகஞ் சூட்டியருளினர்.

மங்களம்! ஜெயமங்களம்!! நித்யமங்களம்!!!

சக்கரவர்த்திமகனர் திருவடிகளே சரணம்

முற்றிற்று.

---

உ

குகமயம்.

# சாற்றுக்கவி.



இந்நூலாசிரியர்க் காசிரியரும்

திருப்பாத்திருப்புலியூர் புகையிலைமண்டி

ஸ்ரீ கந்தபக்தர் கழல்கட்குத் தொண்டுபூண்டொழுகும்

ம-ா-ா-ஸ்ரீ, சிவ அதிகப்ப

## வீ. சோமசுந்திர செட்டியார்

அவர்களியற்றியது.

தண்ணாரிதழி யலங்கல்புனை தக்கோரிடப்பாகத்தில்வள
ரெண்ணுதறங்கள்நாலெட்டு யின்போடியற்றுமெனம்மைதனைப்
பண்ணாலேத்திவழிபடுவோன் பலநாடகங்கள்பாடியுளான்
திண்ணார்காந்தரிஷிகோத்திரன் திகழ்பாவாடையீன்றசுதன்.

வேறு.

எத்திக்கும்புகழ்வாய்ந்த தூக்கணம்பாக்கம்வாழின்பார்மிக்கோன்
தித்திக்குராகவன்சரிதையினுபித்தியம் சீர்கொள்காண்டத்தில்
பத்திக்குராவணசம்மாரமதை நாடகமாய்பாவில்வல்லோன்
சித்திக்குமாரினிதாய்பாடினான் கல்வியிற்சிறக்குமேலோர்.

வேறு.

பல்வகையுலகும் பயின்றிடுந்தோன்றல்
பலபலகாவிய மெம்பால்
மெல்லவேபோந்து கற்றிடுநிபுணன்
மேதையற்குறைத் திடுமன்னன்
தொல்லைமிகுவியாதி யுணர்ந்துமே
யவிடதம்தொடுத்தளித்த கற்றிடும்பானு
வல்லவநடேசநம் கந்தவேளருளால்
வையகத்தினிது வாழ்குகவே.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

ஸ்ரீமத் இராமாயண உயுத்தகாண்டத்தில்

# இராவண சம்மார நாடகம்

## கணபதி துதி.

ஆனைமுகத்தைங்கரனே யகிலந்தன்னை
  அழித்தளிக்குங்காரணனே கைலைமேவும்
மானையொருகரம்பிடித்த மகேசர்மைந்தா
  மறைமுதலேசித்திபுத்தி மகிழ்மணாளா
தேனைநிகர்மொழியுடைய ஜானகிக்காய்
  ஸ்ரீராமன்ராவணனை சிதைக்கநாக
சேனையுடன்சென்றகதை நாடகமாய்ப்பாட
  சிந்தைமிசைவந்துயருள் செய்வாய்போற்றி.

## உபாசனமூர்த்தி துதி.

உண்ணாக்கின்மீதமர்ந்து அண்ணாக்கின்மேல்
  ஓங்குகின்றவகாரமெனுஞ் சிகாரரூபி
விண்ணாடுமண்ணாடும் புகழுராமன்
  விளங்கியதோர்சரித்திர உயுத்தகாண்டத்தை
இன்னாளில்நாடகமாய் யானும்பாட
  இலங்கிடவேயெப்பிழையு முறாதவண்ணம்
தண்ணமுதேஎன்னிதயந் தனிலமர்ந்து
  தழைத்திடவேவரந்தருவாய் போற்றிபோற்றி.

## பலதேவர் துதி-கவி.

தேன்நிரைகடுக்கை திசமுழறுதும்பை
  திங்கள்சூடரனுமை பதமும்
வான்புகழ்ந்தேற்ற திருப்பதிமலையில்
  வாழ்ந்துஎன்முதுகின் னேய்துலைத்த
பான்மொழிபொறியோ டரியிருபதமும்
  பங்கயன்வாணி கந்தனையும்
நான்மிகப்பணிந்து நாயகன்ராமன்
  நாடகந்தன்னை பாடுவனே.

## குரு துதி.

### ஆசிரிய விருத்தம்.

தண்பணைமடைவாய்ப்பணி லழுத்துயிர்த்துத்
தழைத்திடும்பாதிரிப் புலியூர்
தனிலுரைபாட ஈசனைமறவாத்
தனம்நிறைவணிகர் தம்மரயோன்
பண்படுவீராசாமி வேடவத்திற்
பரிதிபோன்றுதித்திடு நிபுணன்
பவக்கடல்கடக்க கார்த்திகேயன்சீர்
பதம்பணிந்தவ ரருள்பெற்றோன்
எண்ணொடுமெழுத்து மிலக்கியமுதலா
மீடிலாபலகலை யனைத்தும்
எனக்குபதேசம் செய்திடுங்கவிஞன்
எதிர்த்திடும் பாவலர்க்கேறு
வண்மைசேர்சோம சுந்தரப்பெயரோன்
வனமலர்ப்பதத்தினை யிறைஞ்சி
வழுத்துவேன்ராமன் சரிதைநாடகமாய்
வையகமீதுயான் மாதோ.

### சபை வணக்கம்.

காசினியிலிடியேறு சரபம்போன்றக்
கவிவாணர்முன்னிலையில் கல்லாயானும்
பேசியேஸ்ரீராம நாடகத்திலெந்தப்
பிழைவரினுமவைபொருத்துப் பெரியோர்நீவிற்
நேசித்தூரகுநாதன் புகழ்ச்சிக்கூறும்
நெடியகதைஎன் றுன்னி நிந்தைநீக்கி
மாசில்லாஉங்களவை தன்னிற்சேர்க்க
மலரடியைஎன்சிரமேல் வைத்தோன்மாதோ.

## நூல் துவக்கம்.

---

### விநாயகர் வருகிற கவி.

தழைத்திடுங்கொன்றைதும்பை தனிமலர்முடியிற்சூடி
குழைத்திடுவிபூதிபூசி குரைக்கொம்புந்துதிக்கையாட
இழைத்திடும்பணிகள்பூண்டு வியல்பூதகணங்கள்சூழ
மழைமதம்பொழியுவேழம் மகாகணபதிவந்தாரே.



விநாயகர் வருகிற தரு.

ஐங்கரதேவர்வந்தார்—ஆகுவிலேறி
ஐங்கரதேவர்வந்தார்
ஐங்கரதேவர்வந்தார் பொங்கரவம்மீதிலாட
மங்கையரிருபாலாட மறையோர்சோபனம்பாட ஐங்

அங்குசபாசமிலங்க—முடியில்சந்திரன்
தங்கியொளிவிட்டிலங்க
கொங்குலவுங்கொன்றைதும்பை கொழுந்தேடறுகுதன்ன
சங்கரன்புதல்வரென்று சகலருந்துதிபண்ண ஐங்

துதிக்கையசைந்துதுடிக்க—பூதகணங்கள்
குதித்துதோரணம்பிடிக்க
பதித்தக்ரீடகவகம் பளபளன்றொளிவிட
கதித்தக்காலினில்வீர கண்டாமணிவீரிட ஐங்

சித்திபுத்திகள்கூடவே—தேவர்களித்து
பத்தியாய்மலர்போடவே
நெற்றியில்வெண்ணீரை நிறையபூசிகைவீசி
நத்தியராமநாடக மோங்கபுகழ்பேசி ஐங்

பொது வசனம்.

ஸ்ரீ கணேசமூர்த்தி சித்திபுத்தி சமேதருய் வீற்றிருக்கையில் இலங்காபுரிக்கரசனுகிய இராவணேஸ்வரன் ஆசாரவாசல்காக்கும் கட்டியக்காரன் வருகிறவிதங் காண்க.

### கட்டியக்காரன் வருகிற கவி.

அண்டர்கள்வணங்குயிலங்கைக் கதிபதிராவணேசன்
மண்டியவாசல்காக்கும் மகாபலவீரதீரன்
தண்டொறுகரத்திலேந்தி தாவியபணிகள்பூண்டு
கண்டவர்நடுங்குஞ்சூர கட்டியனிதோவந்தேனே.



### கட்டியக்காரன் வருகிற தரு.

தேவதேவர்போற்றுந்தீரன் தேவனிலங்கேசன்வாசல்
ஆவலுடன்காக்குங்கட்டியன் அன்புடனேவந்தேன்பாரீர்

கோறைப்பல்லும்நீண்டமூக்கும் கோடையிடிபோலதட்டி
தேரைப்போல்முதுகுடையதீரன் கட்டியன்வந்தேன்பாரீர்

செம்பட்டைமயிர்துலங்க ஜெகத்திலுள்ளோர்கலங்க
வெம்புடன்போலேகட்டியன் வீருடனேவந்தேன்பாரீர்

முத்திசிவன்தன்னிடத்தில் மூன்றரைக்கோடிவரம்
மெற்றராவணேசன்வாசல் பெருமையுடன்வந்தேன்பாரீர் வே

### விநாயகரைத் துதித்தல் வசனம்.

ஓம் கணேசமூர்த்தியே ஸ்ரீமத் இராமாயணம் உயித்தியகாண்டத்தை நவரசங்கள் அமைந்த நாடகமாக நொடிபாவனையாய் இச்சபையின்கண் நடத்துவதால் இதற்கு யாதொரு விக்கினமும் வருகாமல் முடிவுபெறும்படி வரந்தரவேண்டும் சுவாமி.

### விநாயகர் வசனம்.

அவ்விதமே வரம்பாலித்தேன் அன்பர்களே.

### இராவணேஸ்வரன் சொல் கவி.

வீரடங்கா ஜெயமுரசு டமடமென்ன
விந்தையுள்ள மேருகிரி கிடுகிடென்ன
வாருதியில் நுரைகிளம்பி புகையெழும்ப
வளர்மண்ணு விண்ணுலகந் தத்தளிக்க
பாரவில்லாள் சிவன் சூலங் கையிலேந்தி
பக்தியுடன் தேவரெல்லாம் பணிந்துபோற்ற
மாரன்நிகர் மந்திரிமகோ தானும்சூழ
மகாசபையில் ராவணனும் வருகின்றேனே.



### இராவணேஸ்வரன் வருகிற தரு.

அண்டரெண்டமும்கிடுகிடென்றிடவே இலங்கையாளும்
அதிபதிராவணன் வந்தனனே
கண்டுமாலியன்தெண்டனிட்டிடவே ரிஷிகள்சித்தர்
கதிகலங்கியே மதியுங்கெட்டிடவே

கொண்டவிடியென சப்தங்கூறியே
கொடியபேய்பரி ரதத்திலேறியே
பிண்டிதெண்டுவாள் கொண்டுமீறியே
பிடிக்குமீசையுந் துடிக்கசீறியே அண்

அரியதவஞ்செய்துஆதிசிவன்வரவே மூன்றறைக்கோடி
அழியாவரமதுபெற்றேன் நலந்தரவே
கரியமேனியுயெறியுவிழியுடனே அகோரதந்தம்
காட்டசூர்யனொளி நாட்டங்கொண்டுடனே

பரிந்துவருணன் பன்னீர்தெளிக்கவே
பண்பாய்சேடனு உடல்நெளிக்கவே
உரியராக்ஷதர் கண்களிக்கவே
உற்றதேவரை உயிர்குடிக்கவே அண்

கைலைமலைதனைதுக்கிகுடைபிடித்தேன் எட்டானைகொம்பை
கதித்தமார்பினில்பதித்துமே இடித்தேன்
குய்யோவென்றழுதேவரையடித்தேன் எதிர்த்தவரை
குத்திகையினல்ரத்தமுங் குடித்தேன்

தையலாந்தேவ மாதரைகிட்டி
தழுவினேன் மோகத்திலெட்டி
பையவே குபேரனையெட்டி
பரித்திட்டேன்புஷ்ப ரதமதைதட்டி அண்

புகைக்கண்ணன் கும்பன் நிகும்பனுடனே வச்சிரதெந்தன்
பூரிவாயன் அதிகாயன் வாடனேவு
சிகைகருத்த இந்திரசித்துடனே கோடானகோடி
சேனைராக்ஷதர் வாருங்கள்திடனேறு

தகைத்தயிந்திரன் தாள்பிடிக்கவே
தாவுங்கதிர்மதி ஓடியொளிக்கவே
பகைத்தஅயன்பஞ் சாங்கம்படிக்கவே
பரமசிவனுங்கண்டால் துடிக்கவே அண்

இராவணேஸ்வரன் சொல் கவி.

கைலாசம் தனையெடுத்தேன் வைகுந்தத்தைக்
கண்ணிமைக்கு முன்னெழித்தேன் சத்தியலோக
தையலரைக் கெடுத்துயெம லோகஞ்சென்று
தத்தளிக்க வேபுடைத்தேன் தேவர்யாரும்
மெய்நடுங்க யிட்டதொழில் செய்யவைத்தேன்
மேதினியில் ஜெபதபமும் நானேயானேன்
பையவே யெனைவணங்காப் பகைவருண்டோ
பகருவாய் மகோதரனே பகருவாயே.

இராவணன் தேசவிசாரணை தரு.

மந்திரிமகோதரனேகே ளிலங்கையில்
மாலயன்றுத்திரன் தேவரெல்லாம்
வந்துடன்கைகட்டி வாய்புதைத்துயென்னை
வணங்கிநமஸ்கரித் தேகின்றாரா



மகோதரமந்திரி சொல் தரு.

போகின்றூர்லங்கைக் கதிபதியும்மிட
பொன்னடிபோற்றியே தேவரெல்லாம்
சாகின்றுனும்மோ டெதிர்த்தவர் மேகங்கள்
சட்டப்படிமழை பெய்யுதையா

இராவணன் சொல் தரு.

உண்டோயெனைப்போலும் மூவுலகில்மந்திரி
உத்தண்டவீர சத்ருசங்காரன்
கண்டேநீயுரைப்பாய் இலங்கைநகரத்தில்
கடவுளைப்போல்வாழ்ந் திருப்பனேயான்

மகோதரமந்திரி சொல் தரு.

இருப்பீரிறவாமல் இலங்கைநகரத்தில்
ஈசனைப்போல் ராவணேஸ்வரனே
அருப்பீர்யெதிர்த்திடும் துஷ்டரையும்மைப்போல
அதிகாரம்பூமியில் செய்வாருண்டோ

பொது வசனம்.

இராவணேஸ்வரன் கொலுவமர்ந்து தேசவிசாரணை செய்துக்கொண்டிருக்கையில் விபீஷணர் வருகிறவிதங் காண்க.

விபீஷணர் வருகிற கவி.

அண்டருக்கமிர்தந்தந்த ஆதிமாயவனைப்போற்றி
தெண்டுதோமரவில்வாளுந் தீங்கிலாபணிகள்பூண்டு

குண்டலம்செவியிலாட கோதையருலமேந்த
விண்டலர்புகழ்ந்துபோற்றும் விபீஷணர்வருகின்றூரே.



விபீஷணர் வருகிற தரு.

விளங்குவேதத்தைநன்ரூய் களங்கமறவுணர்ந்த
விபீஷணரிதோவந்தேன் ராவணன்தம்பி விபீஷணன்
தளங்கொள்ராவணனென்னை தாவியழைத்தசேதி
தன்னையறியவே உன்னிதரதமதில்
பன்னருராக்ஷதர் முன்னிலுஞ்சூழ வி

ஆதிவைகுந்தவாசன் அம்மைலட்சுமிநேசன்
அடியினைதனைப்பணிவேன் அனுதினமும்-அடி
தீதிலாதுடலெங்குந் திருநாமத்தைத்தரிப்பேன்
திண்ணமுடனேவரும் புண்ணியகோஷ்டிகள்
தண்ணடிபோற்றியே வண்ணமாய்துதிப்பேன் வி

அந்தணர்போலேயாகம் அனுஷ்டானஜெபதபம்
அனுதினம்செய்துபுசிப்பேன் சைவநெரிபோல்-அனு
வந்தபெரியோர்க்கெல்லா வழங்குவேனன்னதானம்
வாட்டியேராவணன் ஒட்டிடுந்தேவரை
கூட்டிவந்துதவிகள் மேட்டியாய்செய்குவேன் வி

ஐயோயுலகுக்கெல்லாம் அன்னைஜானகிதன்னை
அசோகவனத்தில்வைத்தான் ராவணன்பாவி-அசோ
குய்யோவென்றுஅழுக குரங்கொன்றிலங்கையில்
கொளித்திவிட்டேமனங் களித்துடன்சென்றதே
அளித்திடுமீசனே தளிர்த்திடசெய்வாய். வி

இராவணனை துதிக்கும் கவி.

அந்தமோடிலங்கைநாட்டை யாளுராவணனேயண்ணு
உந்தன்சீரடியைதம்பி யுகந்திதோபோற்றினேனே.

இராவணன் சொல் கவி.

சந்தோஷம்வாவாதம்பி சற்குணவிபீஷணுநீ
குந்தகமின்றியென்றுங் குலவியேவாழ்குவாயே.

வசனம்.

வாருந்தம்பி விபீஷணு! நீ என்றும் சுகமோடிருப்பாய் இந்த ஆசனத்தில் வீற்றிருப்பாய் விபீஷணு.

இராவணன் மகோதரனிடம் புலம்பல் தரு.

மந்திரிநானென்ன செய்குவேன்ஒரு
மட்டிக்குரங்குசெய்த கெட்டிக்காரத்தனத்தை மந்

ஐந்துமுகமுடைய ஆதிசிவன்மாலயன்
அய்யோவுள்ளேவருக மெய்யும்நடுங்குவாரே
பையக்குரங்குதீயால் செய்ததேபெரும்பங்கம் மந்

மகோதரமந்திரி சொல் தரு.

பங்கம்செய்தது என்கிருய்-அந்த
பாரகைலாசத்தை மீறியெடுத்ததோளா பங்

எங்கும்நகைத்திடாதோ இப்படிநீர்பயந்தால்
ஈடோ அதுஉனக்குஜோடோ ராக்ஷதர்க்கொரு
பாடோயதனைக்கொல்ல ஏற்பாடுசெய்வீர்மன்னு பங்

இராவணன் தரு.

மன்னன்ராமனுர் தூதனும்ஜெய
மாருதிஎன்றும்பேர் கூறுவாருமவனை மன்

அன்னவனுல்லங்கைப்பதி அழியக்காலம்வந்ததே
அடிக்குதேபிணநாற்றம் எடுக்குதென்னசெய்குவேன்
துடுக்காய்சீதையைதொட வந்ததேமந்திரி மன்

மகோதரமந்திரி சொல் தரு.

தொட்டசீதையை விட்டாலேஉன்னை
தொல்லுலகோரெல்லாம் புல்லாய்நினைத்திடுவார் தொ
கெட்டிக்காரனுன்னைபோல் எட்டுத்திக்கிலுமுண்டோ
கேவலமாகிய காவலன்ராமனை
நீபலவானென்று ஆவலாய்கூறுகிறீர் தொ

இராவணன் சொல் கவி.

இத்தனைதிடஞ்சொல்வோர்கள் இல்லையென்சபையில்மந்திரி
புத்தியில்பலவான்நீயே புகழ்ந்துனக்களித்தேனிந்த
வெற்றிசேர்ரத்தினமாலை விரும்பியேயணிந்துக்கொண்டு
பத்தியோடருகிருப்பாய் பலேபலேயுனைப்போலுண்டோ.

விபீஷணர் ராவணனுக்குச் சொல் கவி.

பொரும்பொரும்பொரும்நீர்மந்திரி புத்தியைகேட்டுவீணாய்
தருமநீதியைமறந்து தாங்கொணுகாமத்தாலே
கருமங்கைக்கொண்டாய்ராமன் கடவுளென்றறிந்திடாமல்
பெருமைகள்பேசவந்த பேய்மதிவேண்டாமண்ணே.

இராவணனுக்கும் விபீஷணனுக்கும் தர்க்கம்.

இராவணன் காவடிச்சிந்து.

எண்டிசையோருமென்காலில் தெண்டனிட்டேகுவதைநீ
ஏனோகண்டுபேசுருய் விபீஷணு-புவி
எவர்க்குமதிககுண பூஷணு
மண்டியேயவனையிருதுண்டாய்செய்தவன் தம்பியை
மார்பிளந்துயிர்குடிப்பேன் பாருமேசீதை
மங்கையைவிடுவேனோநீர் கூறுமே

விபீஷணர் காவடிச்சிந்து.

கூறுவதழகோசீதை மீறியழுதிடுங்கண்ணீர்
கொன்றிடும்ராக்ஷதர்க் கொருவாளண்ணையவள்
கோபமோயிலங்கைசுடுந் தீயண்ணு
மாருதியெனுங்குரங்கு வாருதியைத்தாண்டியேபோய்
மன்னவன்ராமனிடத்தில் கூடியே-நம்மை
மடக்கிக்கொன்றிடவரும் நாடியே

இராவணன் காவடிச்சிந்து.

நாடியந்தகுரங்கைப்போல் கோடிகோடியாய்வந்தாலும்
நானினிபயந்திடுவதேதடா தம்பி
நரரைப்புகழ்ந்துசொன்னுய் நீமூடா
ஓடிடுஅவரிடத்தில்பாடிடு உன்பஞ்சபாட்டை
ஒத்துக்கொள்ளுவேனோ உந்தன்புத்தியே-ஞானம்
ஓதவந்தாய்காக்கைபோல் கத்தியே

விபீஷணர் காவடிச்சிந்து.

கத்தியேமுன்னுள்கார்த்த வீரியன்முன்நீயெதிர்த்து
காலாலுதைப்பட்டோடின யல்லவோ-அந்த

காரணவெட்கத்தை யின்னம்சொல்லவோ
பத்தினிவேதவதியாள் பகர்ந்தசாபத்தால்மாதர்
பதைக்கதொட்டானுன் மண்டைதூளடா-இலங்கைப்
பதியுஞ்சதமோயண்ணு கேளடா

இராவணன் கோபித்து சொல்லும் கவி.

உதிக்கின்றகதிரோன்முன்னே ஓங்குமின்மினிபூச்சிபோல்
கொதிக்கின்றயென்முன்னந்த குரங்குமானிடரென்செய்வார்
மதிக்கின்றராமனோடே மடையாநீசெல்வாய்நின்ருல்
கதிக்கின்றவாளினுலே கண்டரெண்டாக்குவேனே.

பொது வசனம்.

இராவணேஸ்வரன் சீதையம்மனை ராமரிடத்தில் கொண்டு போய்விடும்படி புத்திசொன்ன விபீஷணர்மேல் கோபித்து கையில் பிடித்திருக்கும் வாளாயுதத்தால் ஓங்கிவெட்ட வருகையில் விபீஷணர் பயந்து பகவானைத்தேடிவருக ஸ்ரீ ராமபிரான் எழுபத்திரண்டு வெள்ளம் வானரப்படையுடன் வருகிற விதங்காண்க.

இராமர் இலட்சுமணர் அனுமான் நளன் சுக்ரீபன் அங்கதன்

சாம்புவந்தர் வானரப்படைகள் வருகிற கவி.

சீதைதந்தகணையாழி மாருதியுங்காட்ட
சிந்தைகளிகூர்ந்து ஸ்ரீராமச்சந்திரர்
வாதைபுரிராக்ஷதரை ஒழிக்கவேண்டி
வர்ணலக்ஷங்கோடி வானரங்கள்சூழ
ஓதையுள்ளஅனுமான்மேல் தானுந்தம்பி
ஓங்கிய அங்கதன் தோளின்மீதிலேறி
தீதைவிட்டசுக்ரீபன் வழியைக்காட்ட
தென்கடலின்கரைநாடி வருகின்ருரே



## இராமர் சொல் தரு.

அயோத்திராமரிதோ நல்ல
ஆதியும்ஜோதியும் நீதியுமானவர்
மெய்யர்க்குவரமிதோ தந்தேன்
பையரவணைமீது பள்ளிக்கொள்ளுமுல்லாசன்
பக்தரக்ஷகனுகி யடியர்க்குவிஸ்வாசன்
பாசமுடனனுமான் பரியைப்போல்தூக்கிட
பண்பாய்படைத்தலைவர் முன்னமேநீக்கிட அ

அங்கதன்தம்பியை சுமக்கவெகு
அருமறையும்ஞான நெறிமுறைதெரிந்தோர்
மங்களங்கூறி கண்ணிமைக்க
துங்குனுகும்சுக்ரீபன் துடர்ந்துவழியைக்காட்ட
துதித்துசாம்புவந்தர் தொல்வினைதனையோட்ட
தூமணிக்கவரிகள் துடர்ந்துகளனும்போட
துஞ்சிடாதமலர் தூவிவானவர்நாட அ

சிற்றன்னைகை கொடுக்கவாங்குமிந்த
சித்திரமரவுரிகள் ரத்தினமலையைப்போல்
மெத்தப்பிரகாசம் விடுக்க
நற்றவத்தோரிஷிகள் நணிகியாசீர்வதிக்க
நாதன்ராமனென்றிந்த நானிலமுந்துதிக்க
நாகசுரமுரசு பேரிகையடித்திட
நாலுலக்ஷங்குரங்கு தோரணம்பிடித்திட அ

தாக்கிடும்கோதண்டம் பிடித்துயென்னைத்
தாவியராக்ஷதர் மேவியசிரங்களை
போக்குவேனென்று பல்கடித்து
தூக்கனும்பாக்கத்தில்வாசன் துலங்குஞ்சான்றோர்குலேசன்
பாக்கியன்பாவாடைநேசன் பாலன்நடேசதாசன்
பாடியகவிக்கருள் பகர்ந்திடுராமன்
பரிதிகுலத்தி லவதரித்திடுஞ்சோமன் அ

## இராமர் சொல் கவி.

சுக்ரீபன் அனுமானேநாம் தோன்றுந்தென்கடலோரத்தில்
இக்கணம்வந்ததாலே யீடிலாநமதுசேனை
எக்கிடுவானரங்கள் எழுபத்திரண்டுவெள்ளம்
ஒக்கவேதங்கியிங்கே யோசனைசெய்குவோமே.

## பொது வசனம்.

ஸ்ரீராமசுவாமி தென்கடல் கரையோரத்தில் வானரப்படைக ளுடன் பாளையமிறங்கி இராவணனை ஜெயித்து சீதையம்மனை

கொண்டுவரும் விஷயத்தை ஆலோசித்துக்கொண்டு வரும்சமயத்தில் விபீஷணர் அபயமிட்டு ராமபிரானைத் தேடிவருவது காண்க.

விபீஷணர் சொல் தரு.

பார்க்கடலனந்தன்மீது பள்ளிகொண்டுலகீரேழை
கார்க்குப்ஸ்ரீமாயாநேயா சபடன்ராவணனுக்கேநான்
மார்க்கத்தையுரைக்கயெந்தன் மயிர்பிடித்திழுத்துதைத்தான்
ஆர்க்குமுன்கமலபாதம் அடியனுக்கருள்வாய்போற்றி.

விபீஷணர் சொல் தரு.

அபயம்அபயம்அபயமையனே ஸ்ரீராமச்சந்திரா
ஆதரித்தென்னையாள வேண்டுமே
உபயபாதம்போற்றினேனையா ஸ்ரீராமச்சந்திரா
உன்னையன்றிவேறு துணையுமில்லையே
அண்ணன்ராவணன்பண்ணக் கொடுமையை-ஸ்ரீராமச்சந்திரா
அடியன்சொல்லவாய் கூசுதையோ
தாயென்றெண்ணுமல் ஜானகிதன்னை-ஸ்ரீராமச்சந்திரா
தாவியசோகை வனத்தில்வைத்தானே
சீதையைவிட செப்பினதாலே-என்னைவாளால்
சேதிப்பேனென்று மோதியடித்தானே
அடித்துமேயந்த நரரிடத்தில்-போடாவென்று
அனுப்பினனென்னை யாதரிப்பீரே அப

இராமர் சொல் கவி.

அந்திரதேவர்வாழ்த்தும் அனுமந்தாயெனதுதோழா
வந்திடுமிவனைப்பாராய் வஞ்சகத்தாலேநம்மை
தஞ்சமென்றடைகின்றானோ தாழ்விலாமெய்யன்போடு
கெஞ்சியேவருகின்றானோ கிருபையோடுரைசெய்வாயே.

வசனம்.

வாருமப்பா அனுமானே! இதோ பார்த்தீரா யாரோ ஒருவன் தலைமேல் கரத்தைக்கூப்பி அழுதகண்ணும் இராம சிந்தையாய் வருகிறான்; விபரத்தை சொல்லவேண்டும் பாலகா.

அனுமார் சொல் தரு.

அய்யனேசொல்லுவேன் கேளுமே-புகழை
அறிந்தவரையில் யானுமே
வெய்யவன்காணுதலங்கை வேந்தன்ராவணன்தம்பி
விபீஷணனிவனென்று விளம்பிடுவேன்நம்பி
வேதனேயுன்னிட பாதத்துணையைநாட்டி
விதிமுறைபோல்துதி செய்துவந்தான்கோடி அய்

தேவபுராணமறிந்தோன் தேவதாபக்தி
விரும்பிசெய்யவே தெரிந்தோன்
மாதாவாலவன்சிநேகம் மட்டுநமக்குத்தானே
மாதீசன்கிருபையால் கிடைத்தால்போதுங்கோனே
னமரித்துராவணனென்னைக் குரித்துவெட்டியவாளே
பரித்துநீதியாலுயிர் தரிக்கக்கார்த்தான்ஆளே அய்

ஊத்தையாகியகள்ளும் சுள்ளுமிவன்
உண்டானென்பதை தள்ளும்
நேற்றுராவணனிடம் நேருயென்தாயைவிட
நீதியுரைத்ததாலே நீக்கினனிவன்கெட
நீச்சத்தத்துவமற்ற ஆச்சிக்கிவன்மகனே
பேச்சுத்திடஞ்சொல்லவே கூச்சிவிட்டான்ஆளே அய்

இராமர் சொல் சிந்து.

சரணமடைந்தவரை-கார்க்காவிட்டால் - சத்தியவானென்றுல கம்நத்திவிடுமோ - ரவிகுலம்தன்னில்வந்தேன் - தண்டகாரண்ய-ரஞ் சித் தபசிகளை ரக்ஷிப்பேனென்றேன் - சிபிராஜன்புருவாலே - தன் னுடலை - சிதறாமல்அறுத்துமேதந்தான்மண்மேலே - பெற்றஜடாயு பறந்தான்-மருமகட்காய் - உற்றபோரினிலவன்ஒடியிறந்தான்-கத்து யானைஓசைக்கண்டு - அக்கணமே - பார்த்தானேமாயவன் ஓடியே பண்டு - சங்கருஅபயமென்றுனே - மார்க்கண்டன்-ஜாடியேசிவன் எமனைநாடிவென்றுனேபகையாளிதம்பியாலும் - என்னைநம்பி - பக்ஷ முடன்ராகவனே ரக்ஷிப்பாய்என்றுன் - வங்கையோயீதென்னவீரி யம் - விபீஷணனை வாவென்பதே - மாருதியும்சொன்னகாரியம்- தந்தனம்.

இராமர் சொல் கவி.

சுத்தவீரியம்படைத்த சுக்ரீபாசொல்லக்கேளாய்
பத்தியோடபயமென்று பலமுறையென்னைக்கூவி
நத்தியேவருகுமிந்த நண்பன்விபீஷணனையோடி
இத்தருணத்திலன்பாய் இயலுடனழைத்துவாராய்.

சுக்ரீபன் விபீஷணரை அழைக்கும் கவி.

ஆண்டவ ராகவன் அன்புடனும்மை
வேண்டியே யழைத்தார் விபீஷணு வாராய்.

விபீஷணர் இராமரைக்கண்டு சொல்லுகிற
ஆனந்தக் களிப்பு.

இராமனைக்கண்ணுரக் கண்டேன்-எந்தன்
ரஞ்சிதகரங்களை முடிமீதில்கொண்டேன்
மாமதம்பிறவிநோய் விண்டேன்-துஷ்ட

மட்டிராக்ஷதருட மாய்கையிலண்டேன்
ஜென்மசாபல்லிய மாச்சு-ஹரி
ஸ்ரீராமமந்திரத்தார் கைப்பேச்சு
அன்னைதந்தையிவருச்சு எந்தன்
அண்ணன்ராவணன்செய்த உபகாரம்பேசு இ

விபீஷணர் தரு.

இராகவனேசரணம்-தசரத
ராமாஉன்சரணம்
பாகமுடன்நம்பினேன் பரந்தாமாஸ்ரீராமா
பாதுகாற்பதுன்கடன் பரிதிகுலசோமா இ

ஆகாதானுடன்பிறந்த-பாபத்தைத்தீர்த்து
ஆதரியெனைசேர்த்து
ஏகாந்தநாயகாயிப்போ உமக்கபயம்
இன்னந்தாமதமேனோ அன்னைஜானகிநேயா இ

இராமர் விபீஷணனுக்கு இலங்காபுரியை முடிதரித்தல் கவி.

அஞ்சநீவேண்டாமெந்தன் அன்பன் விபீஷணனேகேளாய்
கஞ்சன்மால்சிவனும்பூமி கதிர்மதியுள்ளமட்டும்
தஞ்சமோடிலங்கைநாட்டைத் தகுமுடியுனக்கேசூட்டி
வஞ்சமில்லாமல்கார்ப்பேன் வாவலக்கரந்தந்தேனே

வசனம்.

வாரும் வாரும் விபீஷணரே! இனிமேல் நீர் யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம் இலங்காபுரிப்பட்டணத்தை திருமூர்த்திகள் சந்திர சூரியர் பூமியுள்ளமட்டும் ஆண்டுவரும்படி உமக்கே முடிசூட்டி வைக்கிறேன் இராவணேஸ்வரன் சீதையைவிட்டு என்னை சரண மடைந்தால் எங்கள் பட்டணமாகிய அயோத்தியாபுரியை முடி சூட்டி வைக்கின்றேன் அந்த ராவணன் உற்பத்தியும் இலங்கை யுண்டாகிய வரலாறையும் அவன் அரசாளும் நீதியையும் விபரமாய் சொல்லவேண்டும் விபீஷணரே.

விபீஷணர் இராவணன் வரலாறைக் கூறல் தரு.

அந்தராவணன்பெருமையை அரிந்ததை ஒருவகைகேளும்சுவாமி
முந்தினுள்சேட்டைக்காற்றடித்திடமுறித்து மேருமலைசிரம்மூன்றை
எழுந்தசிகரம்கடலினில்யெழுனூறு யோசனையகலமாச்சு
பழுதில்லாயேழுமதில்சூழ்ந்தபண்புள்ள லங்கைநகரமென்பார்

மதிலொன்றுக்குவாசல்பதினாறு மகத்தானவேணபேர்காவல்சுவாமி
துதித்தமந்திரிமாரனேகரில்துண்டன் மகோதரனுண்டொருவன்
அவனால்இலங்கைராவணனோடானைசேனை முற்றுமழிந்துவிடும்
தவத்தால்பெற்றயிந்திரசித்தொடு தாவியமைந்தரனேகருண்டு

வெள்ளிமலைபிடுங்கிஅண்ணன்வேண ஆனைக்கொம்மைமார்பில்தைத்தான்
துள்ளியீசன்கொடுத்தவாளுந் தூங்காதமூலபலமுண்டங்கே
மண்டலத்திலவனைஜெபிப்பவர் மாதவாகேசவாவொருவரில்லை
கொண்டுந்தன்கோதண்டமேயவனைக்கொன்றிடுங் கொன்றிடுங்கொன்றிடுமே

வசனம்.

கேளும் பகவானே இனிமேல் நடக்கும்விதம் ஏதென்றால் நமது வானரப்படைகளைவிட்டு கடலின்மேல் அணைகட்டி ராவணனை வதைசெய்யும் சுவாமி.

பொது வசனம்.

விபீஷணர் சொற்படி ஸ்ரீ ராமபிரான் கடலில் அணைக்கட்டு வதற்கு வருணன் வரும்படி ஏழுநாள் தவஞ்செய்ய அவன் வரு காதபடியால் கோபங்கொண்டு ராமபாணத்தை ஏவிய மாத்திரத்தில் வருணன் பயந்து ஓடிவந்து அபயமிட்டு மகரமீன் சண்டையை விலக்கிய கதையைச்சொல்லி சரணமடைய அவனுக்கு அனேகவரம் பாலித்து வருணன்மேல் கடலில் அணைகட்டுகிறவிதம் காண்க.

இராமர் கவி.

அன்புள்ளநளனேநீயும் அழகியவருணன்மீதில்
பன்னியவகலமோவோர் பத்துயோஜனையுநீளம்
நன்னயமாகநூறு நாட்டியேயிலங்கைமட்டும்
உன்னிதவணைகள்கட்டி யுகந்துடன்தெரிவிப்பீரே.

வானரங்கள் அணைகட்டுதல் கவி.

மந்தனேமுகுந்தாசுந்திரா மறைமகன்யிந்திரன்மைந்தா
வந்திடுமனுமந்தாநீ மயிந்தவன்துமிந்தனோடே
கந்தமாதனனேசந்திரா கடிகிவராதிமுகத்தோய்
அந்தமாய்கடலின்மீது அணைகட்டிவருகுவோமே.

நளன் தரு.

அனுமந்தாநீவோடிவாராய் ஓடிவாராய்-கடல்
அகலநிகளந்தன்னைப்பாராய் உற்றுப்பாராய்
மனுவாகயெந்தெந்த மலைதூக்கிவந்தாலும்
சனுவாகயென்கையில் தந்தாலேகட்டுவேன் அனு



அனுமார் தரு.

கட்டுவேனென்றிடுமுன்னே சொல்லுமுன்னே-ஓடி
கையினல்மலேரண்டுதன்னை மலேதன்னை
பொட்டுவிழாமலே போய்தூக்கினான்வந்தேன்
அட்டியின்னம்யேனோ அணைகட்டும்நளனேஓய் கட்

அங்கதன் தரு.

ஓய்வில்லாமல்நளன்காண கண்ணுல்காண-இதோ
ஓங்கிக்குதித்தோடினேன் நாணகண்டோர்நாண
வாய்வேகமாகவேவந்தேன் மலேயைத்தூக்கி
சேயனங்கதனிதோ செம்மையாய்பிடிபிடி ஓய்

சுக்ரீபன் தரு

பிடிக்குமுன்நொடிக்குள்ளேபாய்ந்தேன் எகிரிபாய்ந்தேன் மலே
பிடிங்கிகைத்தொயிலாய்சாய்ந்தேன் ஒயிலாய்சாய்ந்தேன்
வெடிக்கமலேயனேகம் இடிக்கிக்கக்கத்தில்வைத்து
நொடிக்குள்சுக்ரீபன்வந்தேன் அடுக்குவாய்நளனேநீ

அடுக்குமுன்காட்டில்வாழ்மலேயை பெருஞ்சிலேயை-இதோ
அசையாமல்பிடுங்கினேன்நிலே சந்திரகலேயை
துடுக்காகநாட்டினில் துலங்கும்மலேகள்தன்னை
முடுக்காய்பிடுங்கியுன்முன் வந்தேன்நளனேபார் அடு



நளன் தரு.

சீக்கிரம்சீக்கிரம்வாருங்கள் எந்தன்
செங்கையில்மலேகளேத் தாருங்கள்

தாக்குங்கடலில்முக்கால் தான்வந்தோம்யணைகட்டி
ஏக்கமேனனுமந்தா இதுதானேவுன்பலம் சீக்

நளன் வசனம்.

அஞ்சனதேவியின் குமாரனாகிய ஜெயவீர உத்தண்ட அனுமானே! கேளும் நாம் அணைகட்ட துவக்கி முக்கால்பங்கு முடித்து விட்டோம். இன்னம் கால்பங்கு கட்டுவதற்குள் மலைபிடுங்கி வந்த சோக்கத்தினாலே உமது வாலை கீழே போட்டுக்கொண்டு தலையை வளைத்து குந்தியிருக்கின்றாயே; இதுதானோ உமது பராக்கிரமம் அனுமந்தனே.

அனுமார் சிந்து.

அனுமந்தனெழுந்தானே - உக்ரமீறி - ஆங்காரங்கொண்டதட்டி ஓங்காரத்துடன் - அடங்காதவிஸ்வரூபங்-கொண்டு-ஆண்டவன்ராமர் பாதத்தை-வேண்டியேகொண்டு-திக்கெனகுதித்துபாய்ந்தார்-எட்டு திக்கும் - தேடியமலைகளைக் கூத்தாடிபிடுங்கி - ஓடிஓடிவந்துகொடுத்தார் - நளன்கையில் - உடனேஉடனேநளன்-இடதுகையால்-வாங்கி யணைகட்டிவரவே - கோபமீறி - வந்துபெருமலைதன்னைப்-பந்தெனத் தூக்கி-கொண்டோடிக்கொடுத்திடவே - நளனும் - கொஞ்சமுமதிக் காமலே-இடதுகையால்-வாங்கிடயனுமந்தன்-இவனை -வதைக்கிறேனென்று-வாலைமுரிக்கினனே-தந்தினம்.

தேவதச்சனாகிய நளனுக்கு சந்தோஷம்வரும்படி
இராமர் கூறல் கவி.

அந்தமாய்நளனேநீயும் அனுமந்தன்கையாற்றூக்கி
வந்திடுமலைகள்தன்னை வாங்கிடுமிரண்டுகையால்
எந்தன்வார்த்தையைத்தள்ளாதே எதிரியின்பலமறிந்த
உந்தனுக்கொருவர்புத்தி யுரைக்கவும்போமோவன்பா.

வானரங்கள் தரு.

மந்தாமுகுந்தாசுந்திராவாடா மலைபிடுங்கிவருகுவோம்
மறுத்துப்பேசவேண்டாம்ராமர் வருத்தப்படுவார்தம்பியே
அந்தமலையென்னுதிப்போ அடுத்தமலைக்குநீபோடா
அதையுமிதையும்பிடிங்கியெந்தன் அக்குள்வைத்துவோடுவேன்
வந்தமாதனனேசந்திரா வழியிலேண்டாமரிக்குறாய்
வாயிலடித்துவுன்மலையை வாங்கியோடுறேன்பாரடா
முந்தநாளிலிந்திரன்முடிக்கி வாளால்வெட்டவே
வந்திடும்மலைகளிதுவாரிக் கொடுப்போம்நளன்கையில் மந்

நளன் அணைகட்டுதல் தரு.

சீதாபிராமனைப்போற்றியே மலர்தூற்றியே-அணை
செய்துமுடிக்குறேன்நேத்தியே கல்லைத்தாத்தியே

குட்டிக்குரங்கேநிற்பதேதடா நின்றால்தீதடா-நமது
குலதெய்வம்ராமரைத்தேடடா குதித்தாடடா
என்னிருகையினில்தருகுவாய் அனுமந்தாதருகுவாய்-நீ
என்றுஞ்சாகாவரம்பெருகுவாய் ராமரால்பெருகுவாய்
இலங்கைநகரைவந்துகிட்டினேம் அதனைகட்டினேம்
எதிர்த்தராக்ஷதர்களைவாட்டுவோம் சாகக்காட்டுவோம்

நளன் கவி.

அணைகட்டிமுடித்துவிட்டோம் அரிகரிராமச்சந்திரா
இணையிலாராவணேச ரிருந்திடுமிலங்கைநாட்டைத்
தினைப்பொழுதெம்மைவிட்டால் திரட்டியேகடலில்போட்டுக்
குணமுள்ளயென்தாய்தன்னைக் கூட்டியேவருகுவோமே.

பொது வசனம்.

வானரங்கள் கட்டிய அணையைக்கண்டு ராமபிரான் சந்தோஷித்து அனுமான் முதலோர்சூழ கடலைக்கடந்து சுவேலமலையின் மேல் ஏறி நளனல் கட்டியவிழுதிக்குள் பாளையமிரங்கி இருக்கையில் ராவணன்கண்டு அவர்களைப் பார்த்துவரும்படி சுகசாரணர்களையனுப்ப அவர்கள் ராமர் படைக்குள் புகுந்து சுற்றி பார்த்துவருகையில் விபீஷணரால் சாரணரென்றறிந்து அவர்களைப்பிடித்து கட்டியடித்து ராவணனுக்குச் சொல்லும்படி தருமநீதிகளைப் புகட்டி ஓட்டிவிட அவர்கள் இலங்கேசனுக்குச்சொல்லி முறையமிட்டு உத்திரமணிகோபுரத்தின் மீதிலேறி இராமர் முதலோரைக் காட்ட இராவணன் பார்த்து கோபங்கொண்டு சொல்வது காண்க.

இராவணன் கோபத்துடன் சொல்வது தரு.

இவனேயிவனேராமன் இவனேயிவனேலட்சுமணனுமே
இவனேநமதுயிலங்கைசுட்ட யீடில்லாதனுமந்தன்
இவனேவாலிதம்பியப்பால் இருப்போன்சாம்புவந்தனே
இவனேவங்கதன்மற்றுள்ளோர் இலைக்காய்தின்னுங்குரங்குகள்

இராவணனை விபீஷணர் இராமருக்குக் காட்டுகிற
தரு.

பாரும்பாரும்சுவாமி கோபுரமீதில்
பாரும்பாரும்சுவாமி
பாருங்கோபுரமீதில் ஆருமெதிரில்லாமல்
மார்பில்கையால்தட்டித் தூரியிறைச்சலிடும்
மடையன்ராவணனையா நம்மைக்கண்டு
மதங்கொண்டாடுறன் மெய்யா-கொல்ல

தடையேன் கோதண்டகையா-இந்த
தாசன்சொல்வது பொய்யா பா

சுக்ரீபன் ராவணன்மேல் திடீரென்று பாய்ந்து
சண்டைசெய்கிற தரு.

கொண்டவிடிபோலதட்டக்கண்டேன்ராவணன்தன்னைக்
கொக்கரித்தவனெதிரே குதிப்பேன்-உயிர்க்
கொன்றுமேராமர் பாதத்தைத்துதிப்பேன்

கண்டுமொழிஜானகியை விண்டெடுத்தகைகள்தன்னைக்
கண்டதுண்டஞ்செய்துரண்டாய் முறிப்பேன்-விரலைக்
கத்தரித்துவாலினுலே தரிப்பேன்

பண்டுநாள்கைலாசத்தை மண்டியெடுத்திடுந்தோளைப்
பக்கென்றுயென்கையினுலே குத்துவேனவன்
பல்லையுமுறித்துக் காலைச்சுத்துவேன்

துஷ்டனையென்னண்ணன்வாலி சுண்டெலியைப்போலேவாலில்
தூக்கிக்கட்டியிழுத்தான் முந்தனுள்யிப்போ
துலைக்கிறேனவன்தம்பி யிந்நாள் கொ



சுக்ரீபன் சண்டை தரு.

வாலிதம்பிசுக்ரீபன்நானே அடாராவணனே
வதைத்துவுடலைசிதைப்பேன்பாரடாஅடா ராவணனே

இராவணன் தரு.

சிதைப்பேனென்றுய்மதிப்பில்லாமலே அடாசுக்ரீபனே
சிந்துசிந்தாய்வெட்டியெரிகுவேன் அடாசுக்ரீபனே

சுக்ரீபன் தரு.

வெட்டவுன்னைராமபாணமே இப்போவந்திருக்க
வெருத்துவுறுத்துப்பார்ப்பதேனடா அடாராவணனே

இராவணன் தரு.

பார்க்குமுன்னே தூக்கி எறிந்தேன்பாரடாசுக்ரீபனே
பஞ்சாயுடலம்நஞ்சிப் போகுதடாசுக்ரீபனே

சுக்ரீபன் கந்தார்த்தம்.

தாயானஜானகியைப் பூமியோடே
தான் தூக்கிவந்திட்டப் பாவியான
பேயாகேள்வுன்தலையை யறுப்பதற்குப்
பெருமானேயுனக்கெமனாய் வந்திருக்க
காயாதேபலபலவாய் வாய்பிதற்றிக்
கத்தாதேசத்தியமே யில்லா துரோகி
வாயா துநீநினைத்த எண்ணமெல்லாம்.

சுக்ரீபன் தரு.

வதைக்குரேன்பாராய் உந்தனையிப்போ
சிதைக்குரேன்நேராய்
அதைத்தவுன்தலைபத்தும் பதைக்கபிடிங்கிக்கொண்டேன்
இதைக்கண்டுபோய்ராமர் இணையடிமேல்வைப்பேன் வதை

இராவணன் பத்துமுடியையும் இராமருக்குக் காட்டல் கவி.

வெள்ளிமாமலைபிடிங்கி வீரங்கொள்ராவணேசன்
துள்ளுமாமுடிகளைந்தோன் தொல்லடிமீதில்வைத்தேன்
கொள்ளுவீர்மெய்யன்போடு கோதண்டபாணியன்பாய்
விள்ளுவீரினிமேற்செய்யும் விபரத்தைவிளங்கத்தானே.

பொது வசனம்.

சுக்ரீபன் கொண்டுவந்த இராவணன் பத்துமுடிகளையும் சுவாமி கண்டு சந்தோஷித்து அங்கதனை ராவணனிடம் தூதனுப்ப, அவன் சீதையைவிட சம்மதிக்காதபடியால் சண்டைசெய்ய நாளிட்டுக் கொண்டு வந்து சுவாமிக்கு தெரிவிக்க, பகவான் கோபங்கொண்டு சொல்லுகிற விதங்காண்க.

### இராமர் காவல்வைக்குதல் கவி.

வடவாடல்தன்னில் சுக்ரீபாநில்லு
வளர்மேற்றனுமானே செல்வாய்தெற்கில்
திடமானவங்கதனே நிற்பாய்கீழ்பால்
திகழ்நீலாநீகார்ப்பாய் திறமையோடு
படைத்துணைவொவ்வொருவருக்குப் பதினேழ்வெள்ளம்
அடவாகறுத்திரதிசை யானுந்தம்பி
அங்கையில்கோதண்டமுடன் நிற்போம்செல்வீர்.

### இலங்காபுரிக்கு இராவணன் காவல்வைக்குதல் தரு.

பட்டணம்பதனம்பதனம்-இலங்கைநகர்
பட்டணம்பதனம்பதனம்

அட்டதிக்கையும்ஜெயித்த ஆங்காரத்தைசுக்ரீபன்
அழித்துயென்முடிபத்தும் அய்யோபரித்தானவன்
கெட்டுசெய்யாமலே நிமிஷம்போய்கார்க்கவேணும்
நெரிஞ்சிமுள்ளுதைத்தாலுங் குனிஞ்சிப்பிடுங்கவேணும் பட்

நீலனங்கதனனுமான் சுக்ரீபனும்
நிற்கின்றூராம்மூன்று பக்கமுமே
ஆலகாலம்போலே அரிராமனுந்தம்பியும்
அதட்டிவில்பிடித் தெதிர்நிற்கவுமே
பாலர்முதல்பட்டணத்துள் ளோர்வாருங்கள்
பண்பாய்நாற்புரஞ்சென்று காவலைக்காருங்கோள்
சீலமென்னடாசிங்கம்வாழ்ந்து செழிக்குங்காட்டை
சிறுநரிவளைத்தாப்போல் வளைத்தான்நமதுகோட்டை பட்

### பொது வசனம்.

இராவணேஸ்வரன் இலங்காபுரிபட்டணம் நாலுகோட்டை வாசலுக்கும் ராக்ஷதர்களை காவல்வைத்திருக்க, அக்காலையில் வானரப் படைகளும் ராக்ஷதரும் கைகலந்து சண்டைசெய்ய அனுமார் தனித்து ராவணனிடம் சண்டைசெய்கிற விதங்காண்க.

### இராவணன் கவி.

மந்திரிமகோதரனே யிக்குரங்குமுன்னே
மடத்தனமாயிலங்கைதனைச் சுட்டோமென்ற
சந்தோஷங்கொண்டிப்போ யெந்தனேடே
சமர்யுரியவாலதனை முறிக்கிக்கொண்டு
வந்துமேவாயிளித்துப் பல்லைக்காட்டி
வலப்புஜமும்இடப்புஜமும் வலுவாய்த்தட்டி
குந்தியுதால்யென்முன்னே கோபமாகி
கொக்கரித்துகைவாளால் வெட்டுவேனே.

அனுமார் கந்தார்த்தம்.

அன்னையாம்ஜானகியைத் தூக்கிவந்த
அறிவில்லாராவணனே கேளுனக்கு
பன்னியதோரிருபதுகை தலையோபத்து
பலமானவில்சூல வாளுமுண்டு
உன்னியசீர்யென்குலமோ குரங்குகையில்
ஒன்றுமில்லையென்பலத்துக் கதிகம்நீயே
தன்னைத்தான் மெச்சாதே சமர்க்களத்தில்

அனுமார் தரு.

தான்பார்ப்போம்வாராய்—இருவருட
சமர்த்தையும்நேராய்
இன்னமேன்நிற்கின்றாய் எடுஎடுபாணத்தை
சின்னபின்னஞ்செய்து சிதைக்குறேனுடலத்தை தா



இராவணனும் அனுமாரும் குத்துச்சண்டை செய்தல்

அனுமார் தரு.

குத்துக்குக்குத்துக்குநீவாடா—ராவணாயென்கைக்
குத்துக்குக்குத்துக்குநீவாடா
தத்தியேன்விழுகுறாயுன் பத்துத்தலையும்வேரோடே
இத்துவிழவேவாலினால் சுத்தினேன்பிழைக்கத்தேடே
இனிஎந்தன்மேல்குத்தடா—சோம்பேரியாய்
இருப்பதோஉன்சத்தடா
மனிதர்குரங்கோநம்மை மடிக்குமென்றாணவத்தால்
மடையாகிடைநாய்போலே மல்லாடுறாய்திரத்தால் கு

இராவணன் தரு.

கேவலங்கேவலம்நீயடா—உந்தனைக்குத்தி
கெலிப்பதோவீரம்சொல்வாயடா

ஆவலாய்கயிலாசத்தை அந்தரத்தில்தூக்கிவிட்ட
ஆள்பலந்தெரியாமலே அணிகிவந்தாய்கிட்ட

அதட்டிக்குத்தினேன்பாரடா—ஓங்கியோங்கி
அழவேண்டாம்நீகூறடா

பதட்டமாய்எதிர்நிற்கும் பஞ்சைக்குரங்கேவாலை
பத்திக்கையிலைவிதோ சுத்தியடித்தேன்காலை கே

அனுமார் தரு.

தட்டிதட்டியென்னைப்பார்த்தாயோ—ரோமத்திலொன்று
தான்விழாததைக்கண்டுவேர்த்தாயோ

எட்டானைக்கொம்பையுங் கருமொட்டைக்கிடாய்போல்முறித்த
எண்ணத்தால்யெனைநெருக்க பண்ணுறாய்சண்டைக்கு
எட்டுரெண்டுதலைமீதிலே காலாலுதைத்தேன்
பட்டுதோபார் க்ஷணப்போதிலே
ஒட்டியவொதிபெருத்தால் ஓங்கியத்தூணுகுமோசொல்
கெட்டுப்போகாதே சீதையைவிட்டாலேசுகம்வரும்நில் குதி

இராவணன் தரு.

மாறிமாறிகெந்துபாய்ந்தனிதோ—வில்லினிற்பாண
வாரிவாரிபேய்ந்துசாய்ந்தனிதோ

காரிடிபோலேயதட்டிக் கன்னத்திலடித்தேனடா
காலனுருலகத்திலே கடுகிபோவாய்நீமூடா
கப்புதேபாணத்தின்புகையும் பசபசன்று
இப்போவூருது என்கையும்
தப்பிலிக்குரங்கேசீதை தன்னைநான்விடுவதுண்டோ
அப்பன்வாய்வுதேவனுனக் காதரவுயென்றுகண்டோ கே

அனுமார் வசனம்.

அடாவாடா ராவணத்துரும்பே எனது சுவாமியாகிய இராம பிரான் கோதண்டத்திற்கு நீ இறையாயிருக்க அதற்குமுன் உன்னைக்கொல்லுவேனே ஓடிப்போவாய் ராவணப்பேயனே.

பொது வசனம்.

இராவணேஸ்வரன் அனுமாரிடம் சண்டைசெய்து மனவியாக்கூலமடைந்து ராமரிடம் நாம் சண்டை செய்யப்போகிறபடியால்

நமது தேவியாகிய மண்டோதரியின் உத்திரவைப்பெற்று செல்ல வேண்டுமென்று நினைத்து தூதுவப்பெண்களை ஏவி அழைத்து வரும்படிச் சொல்ல அதுகேட்டு மண்டோதரி வருகிறவிதங் காண்க.

மண்டோதரிவருகிற கவி.

நகைமதிவதனமின்ன நவமணிபணிகள்பூண்டு
தகதகன்றுடைதுன்ன தாவியரதியைப்போலே
வகைபலதேவமாதர் வாழ்த்தியேயிருபால்சூழ்ந்து
மகரதோரணம்பிடிக்க மண்டோதரிவருகின்றாளே.



மண்டோதரி வருகிற தரு.

மதிக்கும்யிலங்காபுரி பதிக்கரசானமாது
மண்டோதரியம்மன்வந்தேன் ராவணன்தேவி-மண்
கதிக்குந்தேவமாதர்கள் கண்டடிவணங்கிட
கந்தமுலாவிய சுந்திரசேகரி
அந்தமாய்சேடியர் வந்தடிபோற்ற மதி

அந்தமானிடரெந்தன் சொந்தநாத்தியின்மூக்கை
அருத்துக்கொங்கையைத்துணித்தார் முதல்முதலாய்-அரு
கந்தன்கவந்தன்முதல் கரதூஷணுதிகளை
கண்டித்துமேயவர் துண்டித்துப்படைகளை
சண்டித்தனமாய்செய்தார் பண்டுநாள்பழியிதோ மதி

சீதையைத்தூக்கிவந்த வாதையினுல்குரங்கு
செந்தணல்மூட்டிவிட்டதே இலங்கைத்தீய-செந்

காதகத்தாலேபின்னுங் கடலின்மேலணைகட்டி
கதித்தயதிகாயனை வதைத்துயகம்பனேயும்
பதைக்கமகாராக்ஷதர் சிதைக்கக்கொன்ருர்களே மதி

சுத்தகெம்பீரனுன புத்தியுள்ளசுக்ரீபன்
சுழல்காற்றைப்போலேபறந்து வெகுவுக்கிரமதாக-சுழ
பத்துசிரமுள்ளயென் பத்தாவின்முடிகளை
பரித்துக்கொண்டேபுகழ் விரித்துக்கொண்டோடினுன்
குரித்தப்பிரமன்விதி நிறுத்திடப்போமோ மதி

இராவணனைத் துதித்தல் தரு.

வந்தனம்வந்தனம்மன்னவா வஞ்சியாளிதோ-வந்
அந்திரதேவர்கள்போற்றும் அய்யனேயிலங்கைமூர்த்தி
உந்தனிடபொன்னடிக்கி உத்தமிமண்டோதரியாள் வந்

மூவுலகந்தனைஜெயித்தவா—மூன்றரைக்கோடி
முடிகியவரத்தைப்பெற்றவா
தாவியகைலாசத்தை தானெடுத்தவீரசூரா
ஆவியாம்மண்டோதரியாள் அடியிணைக்கனேகமுறை வந்

வசனம்.

வந்தனம் வந்தனம் சுவாமி இலங்கைபூபதியே நேற்றைய வரையில் நடந்த உயுத்தியத்தின் விஷயமும் சுக்ரீபன்செய்த அலங்கோலமும் தூதுவப்பெண்களால் தெரிந்துக்கொண்டேன் என்னை இச்சபையின்கண் அழைத்த விபரத்தைச் சொல்லவேண்டும் பிராணபதியே.

இராவணனுக்கும் மண்டோதரிக்கும் தர்க்கம்.

இராவணன் தரு.

மங்கைமண்டோதரியே மானிடன்ராமன்மேல்கோபம்
பொங்கியேசண்டைக்கு போரேண்டி-எனக்குவிடை
புத்தியாய்மன மொத்துதருகுவாய்
முத்தேயானுமே கத்தலாகுமோ மங்

மண்டோதரி தரு.

கத்தலாமோபிராணநாதா கடவுள்சிவன்மாலயனும்
ஒத்தொருவராய்ப்பிறந்தாரே ஸ்ரீராமனுக-ஒத்
உத்தமாமதை சற்றும்றியாமல்
வெற்றிபேசுருய் சித்தமல்லவே கத்

இராவணன் தரு.

சித்துங்கலங்காதேயெந்தன் சேல்விழிமண்டோதரியே
அத்திமுகன்சுப்பிரமண்யனும் சிவன்மாலயுன்-அத்

அண்டியெந்தனை தெண்டஞ்செய்வதை
கண்டிருந்துநீ மிண்டுபேசுருய் சித்

மண்டோதரி தரு.

ஓரெழுத்தாகியமந்திரம் நாராயணனென்றுவேதம்
பாரெங்கும்முறையிடுகுதே ஓபிராணநாதா-பாரெ
படித்துவாள்கையில் பிடித்துராமரை
கடித்துதின்பனென் றிடித்துப்பேசுநீர் ஓரெ

இராவணன் தர்க்கம்.

ஜம்பை.

அண்டரெண்டபுவனத்துள்ளோர் அடிபணியக்கண்டிருந்தும்
பெண்புத்தியாலெனைதடுத்து பேசுகுராய்மாதரசே.

மண்டோதரி ஜம்பை.

மாதவத்தோர்சித்தர்முத்தர் மாமறையுந்தேடறிய
சீதான்தன்னேடெதிர்த்தால் செத்துமடிந்திடுவீரே.

இராவணன் ஜம்பை.

மடிக்கயென்னைத்திரமுண்டோ மானிடனும்ராமனுக்கு
பிடித்தவனைக்கடித்துதின்ற பின்புனக்குத்தெரியுமடி.

மண்டோதரி ஜம்பை.

தேடரியபூரணமாய் தெரிந்தோர்க்குச் சுழிமுனையா
நாடறியபுருவமத்தி நாதன்வாழு வைகுந்தமே.

இராவணன் கவி.

மாதர்கட்கரசியானமண்டோதரி யாளேபெண்ணே
பாதகன்ராமனுக்காய் பரிந்துநீபேசுகின்ருய்
கோதறுமிலங்கைசுட்டுக் குலவியபுத்திரமித்திரர்
வாதைபட்டொழியச்செய்த வம்பனைவதைப்பேன்போடி.

மண்டோதரி தரு.

நீங்காதகோபத்தைக்கொண்டீர் சாகுங்காலமோவுந்தனுக்கு
நில்லுமேபதில் சொல்லுமே
ஆங்காரங்கொண்டராக்ஷதர் அழியராமனுய்வந்தார்
அல்லவோயானும் சொல்லவோ
அங்கம்நடுங்குதேமங்கை என்க்குமே
இங்கேயிருயிரு அங்குபோகாதீர் நீங்

இராவணன் தரு.

போகவேண்டாமென்றுயெந்தன் பொற்கொடிமண்டோதரியே
பொருபொருயிங்கே இருயிரு
சாகரம்பிரண்டிட்டாலுஞ் சண்டைக்குப்போகவேமனஞ்
சலிப்பேனோபெண்ணே மலைப்பேனோ
சாட்டிராமனைவாட்டி கொடியினில்
தாட்டியாகவே வீட்டில்வருகுவேன் போ

மண்டோதரி தரு.

வீட்டிற்குவருவேனென்றீர் வேதன்விதியெப்படியோ
விசாதேவீரம் பேசாதே
கூட்டியந்தசீதையாளை கொண்டுபோய்ராமர்முன்விட்டுக்
கூடுவாய்பிழைக்கத் தேடுவாய்
கூறுமென்முகம் பாருநாதனே
வாருனுமிருபேரும் போகலாம் வீட்

இராவணன் தரு.

போய்வந்துன்னைசேர்ந்தணைவேன்பொன்மும்கவாடாதேபெண்ணே
போடிநீகுடி கேடிநீயே
தாய்வயிற்றில்ஜெனித்தபோதே தானுண்டுசாவெல்லோர்க்கும்
கத்தாதேயென்முன் கத்தாதே
தையல்வார்த்தையை அய்யோகேட்பவர்
வெய்யநரகத்தில் பையமூழ்குவார் போ

மண்டோதரி வசனம்.

கேளும் பிராணேசா! மானிடவடிவமாய் பிறந்து வந்திருக்கும் ஸ்ரீ ராமமூர்த்தியை நீர் ஜெயிக்கமாட்டீர்; என் வார்த்தையைக் கடவாமல் உலக மாதாவாகிய சீதையம்மனை ஸ்ரீ ராமமூர்த்தியாகிய பகவானிடத்தில்விட்டு அவர் பாதத்துணையைக்கொண்டு பிழைப்பீர் என் வார்த்தையை மீறி நடந்தால் இறந்துவிடுவீர் மன்னவா.

இராவணன் ஓரடிக்கந்தார்த்தம்.

இரதிநானும்பெண்ணேயிதுகாலமென்னை சதிமோசம்செய்து
ரத்துசெய்யாதேயன்னமே உனக்கனேக
புத்திசொன்னேன்நான் சொர்ணமே
சதியில்மோசம்செய்யாதே தையல்மண்டோதரியே
மதிதடுமாறிடாமல் மங்கையேவிடைதருவாய்

மண்டோதரி ஓரடிக்கந்தார்த்தம்.

விடையதுதந்தால்படையுடன்ராமர் முடியதைவாளால்
விரிட்டறுப்பேனென்றுமே ஓபிராணநாதா

ஏறிட்டுப்பார்க்காமல் நின்றுமே
காரிழையாள்வென்சொல்லே காலகெதியால்நீரே
கடந்துசண்டைசெய்தாலே கருமம்வருகும்பாரே

இராவணன் ஓரடிக்கந்தார்த்தம்.

கருமானுச்சாரமருமத்தைமேலோர் தருமத்துக்காக
கவியாகப்பாடிவைத்தார் மண்டோதரியே
புவியோர்க்குத்தேடியே வைத்தார்
தவிக்காதேயந்தநூலை தானேவாசித்தநானே
தடுத்துப்பேசும்உன்வார்த்தைத் தகுமெனநம்புவேனே

மண்டோதரி ஓரடிக்கந்தார்த்தம்.

நம்பாமல்நீர்வம்பானவார்த்தை தென்பாகக்கூறி
நாதாபோகாதேநில்லுமே ராமர்கைப்பாணம்
பாதாளஞ்சென்றாலும் கொல்லுமே
வாதானதாருகனும் வணங்காதண்டகாசூரன்
வையகத்தில்கெர்வங்கொண்டு ஐயையோமடிந்தார்களே நா

இராவணன் வசனம்

கேளும் பெண்ணே எனது பிராணதேவியாகிய மண்டோதரியே நான் ராமன்மேல் சண்டைக்குப்போவது நிச்சயம் நீ மாளிகைக்குப் போவாய் கண்மணி.

இராவணன் இராமர்மேல் சண்டைக்குப்போகுதல் தரு.

கொண்டேன்கரமீதுவில் சரமிதோ
கொதியெழுந்தெழுகடல் சுவரிடவே
விண்டேன்கறுமீசைகள் துடியுடன்
வெடிபடயண்டமுந் திடுதிடென
கண்டேன்ராமனே டவன்சேனையை
கசகசகசவென்று கசக்கிவாயால்
உண்பேன்ரத்தாருள் வோடியே
ஓங்கியதேவ ரொழிந்திடவே கொண்

அனுமார் இராமருக்குச் சொல்வது கவி.

ஐயனேவாரும்வாரும் அடியவன்தோளின்மீது
பையவேஏறிநீரும் பார்கோதண்டமேந்தி
நையராவணனைவாட்டி நகைமதிவதனரூபி
தையல்ஜானகியென்தாயை தானழைத்தேகுவீரே.

இராவணனுக்கும் இராமருக்கும்சண்டை இராமர் கவி.

படியெலாந்தத்தளிக்கப் பண்ணவர்நடுங்கச்செய்த
கொடியராவணனேயென்கைக் கோதண்டங்கூவுதுன்னை

மடியவேபோருய்மூடா மாலிவந்தழைக்கின்றுன்பார்
கடிகியென்னேடெதிர்த்துக் கடுஞ்சமர்புரிகுவாயே.



இராவணன் தரு.

காட்டினில்வாழுங்குரங்கை ஓட்டியேசண்டைக்குவந்த
கசடனேயென்னெதிர் நில்லடா
கட்டையைப்போல்ஒட்டைச் சாணில்லாதபையலுனக்கிந்த
கையினில்கோதண்டமென்ன சொல்லடா
நாட்டியரதத்தின்மீது நானிருக்கக்கடவுள்போல்
ஞாயமோகீழிருப்பது மல்லடா
நஞ்சையுண்டசிவனுமே அஞ்சுவாரெந்தனைக்கண்டால்
நரனேயெனக்குநீ யோர்புல்லடா

நாவிரெண்டு லக்ஷங்கணை
மேல்வருகுது பாருபாரு
காவிசெய்யத் தீரமானுல்
கண்டுடனே தேருதேரு காட்

இராமர் சொல்கிற தரு.

தேரின்மீதேறியவுந்தன் வீரியத்தைஇக்ஷணமே
தெரிவிப்பேன்ராவணப் பேயனே
தேவியாம்யெனதுடைய ஆவியானஜானகியை
நீண்டாமல்யெடுத்துவந்த மாயனே

காரிடிபோலேயதட்டிக் கைவில்லையிரண்டுதுண்டாய்
கண்டித்தேன்ராக்ஷதப்பெரு வாயனே
கணக்கில்லாநிருதர்கள் பிணமலையாய்க்குவிந்தார்
கண்ணால்பார்புலஸ்த்தியன் சேயனே

கத்திக்கு அனுமானே
குத்துக்குநீ நில்லுநில்லு
வெற்றிவருமென் றெண்ணாதே
இத்தருணஞ் செல்லுசெல்லு தேரி

இராவணன் சொல்கிற தரு.

செல்லுகின்றகுரங்கின்மேல் உல்லாசமாய்யேறிசண்டை
செய்யச்சொன்னாரோ உன்தந்தைராமனே
செப்புதோவேதசாஸ்திரம் இப்படியுலகத்திலே
சிரிப்பார்ராஜாக்கள்கண்டால் பூமனே

நல்லசாரபாணஞ்சூல வல்லுலக்கையீட்டிபாலா
நான்விடுத்தேன்நீதடுப்பாய் ராமனே
நாட்டியகுரங்குகளை வாட்டினேன்மூட்டுப்பூச்சிபோல்
நசுங்கக்கொண்டேகுருன்பார் எமனே

நத்தியவூழி மழைபோல்
சுத்திபாணம் விட்டேன்விட்டேன்
கத்தியவுனது மார்பைப்
பொத்தல்செய்ய தொட்டேன்தொட்டேன் காட்

இராமர் சொல்கிற தரு.

தொட்டகணைதன்னைவாட்டி விட்டேனர்த்தசந்திரபாணம்
தோளுக்குநேர்வருகுது மாளவேபோராய்
கட்டழகிஜானகியை விட்டுவிடுயின்னஞ்சொன்னேன்
கடக்காதேநீதியிது ராவணாபாராய்

அஞ்சியின்னமேனேயென்னை அடைந்தால்சரணமென்று
அளிப்பேனயோத்திபட்டம் உனக்குநேராய்
அந்தமானயுந்தன்தம்பி விபீஷண்னுக்கேயிலங்கை
அரசைக்கொடுத்துவிட்டேன் யானுமேசீராய்

ஆஹாவுந்தன் சமர்த்தை
ஓகோயென்முன் கூருகூரு
ஏகாந்தமாய் இலங்கைக்கு
இப்பொழுதே சேருசேரு தொட்

### இராமர் சொல்கிற வசனம்.

கேளும் இராவணேஸ்வரனே உமது பாதம் குடை கொடி காலாள் கரிபரி ராக்ஷதசேனையெல்லாம் மாண்டுபோய் விட்டதுடன் நீயும் ஆயுதமில்லாமல் நிராயுதனுய் பூமியைப்பார்த்து நிற்கின்ருய் முன்னமே நான் கூறியபடி என் தேவியாகிய சீதையம்மனை என்னிடங் கொண்டுவந்து விட்டு சரணமடைந்தால் சுகப்படுவாய் இல்லாவிட்டால் நாளையதினம் உமது படையுடன் இரதமேறிக் கொண்டு ஆயுதபாணியாய் சண்டைக்குவாரும் ராவணு.

### இராவணேஸ்வரன் நிராயுதனுய் புலம்பிக்கொண்டு இலங்கைக்கு வருகிற தரு.

இந்தக்குறைவருமென் றெண்ணுமல்மந்திரி
ஏழைமதியால்மோசம் போனேனே
மந்தப்புத்தியால்பாட்டன் மாலியவான்பேச்சை
மருத்துசண்டைசெய்யவே வந்தேனே
கொந்தங்கொடிரதமுங் கொடியசேனையும்வாளுங்
கொடுத்துநிராயுதனுய் நின்றேனே
அந்தராமன்வில்லுக்கு ஆரெதிருலகத்தில்
அதையறியாமல்சிக்கிக் கொண்டேனே
கண்டால்யெனைநடுங்கும் கதித்ததேவர்மூவரும்
கைகொட்டிநகைப்பாரே மந்திரியே
கொண்டுவந்தசீதைக்கு விண்டால்பாரேனுமிதை
கொக்கரித்துக்காரி யுமிழ்வாளே
மூண்டத்தனத்தால்பெற்ற மூன்றரைக்கோடிவரம்
முற்றுநிற்காமல்பாழாய் போச்சுதையோ இந்

### மகோதரன் ராவணனைக் கலைத்தல் கவி.

தன்னுடையமனந்தன்னைத் தானேதேற்றித்
தரணியெல்லாமொருகுடைக்கீ ழாண்டதீரா
என்னத்தான்கெட்டுதென்று ஏக்கங்கொண்டாய்
எத்திசையும்புகழ்கும்ப கர்னன்தன்னை
பன்னரியராமர்படை மீதுவிட்டால்
பறக்கடித்துவுயிர்குடிப்பான் பயங்கிடாதீர்
இன்னிமிஷந்தன்னிலழைத் திடுவாய்லங்கை
ராஜாதிராஜ ராவணனேபோற்றி.

### இராவணன் சொல்லுகிற வசனம்.

அடாவாடா கிங்கிலியர்களே! என் தம்பியாகிய கும்பகர்னன் செய்யும் நித்திரையைக் கலைத்து அழைத்து வாருங்கள் ஏவலாளி களே.

**கிங்கிலியர்கள் நித்திரையைக்கலைக்க கும்பகர்னன் வருகிற கவி.**

நித்திரைகலைந்தபோது நிகரில்லாகும்பகர்னன்
அத்திரவிழிதிறந்து அண்டகோளகைவெடிக்க
கத்தியேகள்ளும்சுள்ளுங் கடித்தமேகுடித்தபின்பு
வெற்றிராவணனைக்காண விரைவினில்வருகின்றானே.



கும்பகர்னன் வருகிற தரு.

கூறும்ராக்ஷதர்குல தீரன்ராவணன்தம்பி
கும்பகர்னனும்நானே வெகு
சவுரியபுஜபல நிஜகுணவீரன்-கும்
ஆரும்மதியணிந்த ஆதிசிவனைநாடி
அரியதவத்தால்வரம் பெற்றேனனந்தங்கோடி

சுருள். அண்டகோளகை வெண்டுவெடிபட
மண்டலத்துள்ளோர் கண்டுதிகிலிட கூறும்

சூலத்தைக்கண்டுயெம காலனிவனேயென்று
சொல்லிவாய்மூடிநடுங்க இந்த
பாதலபூதல மீதலவாசிகள்-சொல்
ஆலத்தைப்போல்தேவரை அரைந்துதிரங்குடிப்பேன்
அலைகடலையோர்காலால் ஏந்திவாரியடிப்பேன்

சுருள். அந்தஇந்திரன் வந்திடகுத்தினேன்
தொந்தமேருவை தோளினில்தூக்கினேன் கூறும்

சொல்லும்யுகமோயொரு நாளாகத்தூங்கினான்
சுருக்காயெழுந்துவிடுவேன் என்னை

தொட்டகோரபசி சுட்டிடுவேளையில்
உல்லாசமாகக்கள்ளை ஓய்வில்லாமல்குடிப்பேன்
உடனேமாமிசங்களை உண்டெ ஹும்பைக்கடிப்பேன்
சுருள். ஓடியமிருகத்தை ஜாடியென்கையினுல்
கூடியவரையிலும் மூடியேகின்பேன் கூறும்

சந்திரசூரியர்தன்னை எந்தன்கையாற்பிடித்து
ஜாடிகசக்கியெறிவேன் மாயன்
சக்கரம்போலவே உக்கிரமாகஜாடி
பந்துபோலேபூமியை பரித்துச்செண்டாடுவேன்
பரமசிவனுனுலும் எதிர்த்தால்துண்டாடுவேன்
சுருள். பாரமானதோர் வீரவெண்டயம்
கூரயென்புகழ் தீரனென்றுமே கூறும்

இராவணனைத் துதித்தல் கவி.

அந்தமோடிலங்கையாளும் அண்ணலேராவணேசா
வந்தடிபணிந்தேன்தம்பி வரவழைத்ததைசொல்வீரே.

இராவணன் கொச்சகம்.

கும்பகர்ணுதம்பியேநான் கொண்டுவந்தசீதைக்காக
வம்புசெய்துராமனென்னை வாட்டிவிட்டானுகையினுல்
சம்ப்ரமுடன்நீயவனை சங்கரிக்கவேண்டுமடா
அம்புவில்லுஞ்சேனையுடன் அதிரநடந்தேகுவாயே.

வசனம்.

கேளும் தம்பி நீ நித்திரைசெய்ததை கலைத்தவிதம் ஏதென்ருல் நான் எடுத்துவந்த சீதைக்காக அவள் நாயகன் ராமனும், அவன் தம்பி லட்சுமணனுடன் அனேக வானரப் படைகளுடன் கூடி என் மேல் உயுத்தம்செய்தார். அவரால் நான் துன்பமடைந்ததுபோதும் நீ இக்ஷணமே உன் சேனையுடன் சென்று அவர்களை ஜெயித்து வாரும் கும்பகர்ணு.

கும்பகர்னன் ராவணனுக்கு நீதிகூறல் தரு.

ஐயையோயீதென்னவிதியோ-இலங்கைநகர்
அழியவந்திட்டமதியோ

பையரவணைமீது பள்ளிகொண்டுலகுக்கெல்லாம்
படியளக்கும்ஹரி மாயன்
பண்ணவரிடுக்கந்தீர்க்க தசரதன்பாலனுக
பாருல்வந்துதித்தாரே தூயன்
தையலாமவர்மனைவி ஜானகியைநீயெடுக்கத்

தருமோநீயென்ன ஒருபேயன்
தாய்வரம்பிடித்தயம்பால் வாலியின் ஜீவன்குடித்த
தற்பரன்கோதண்டமேந்தும் நேயன்
துய்யராந்திருமூர்த்தியே ஜோதிராமனுகவுன்னைத்
துலைக்கவந்தாரே சகாயன்
துண்டத்தனவேண்டாந்தாயை கொண்டுவிட்டடிபணிந்தால்

துலங்கிலங்கையில்வாழ்வாய் சேயன்
சொல்லுங்கும்பகர்னன் வார்த்தை
மல்லென்றுநினைத் திடாதே
வல்லலங்கை ராக்ஷதரை
வாதுசெய்தொழித் திடாதே
வாருநீருங் காருமண்ணு ஐயை

இராவணன் கோபித்தல் கவி.

மானிடர்தனைப்புகழ்ந்த மாபாவிவிபீஷணன்போல்
தானினிசொன்னுய்கும்ப கர்னனேதடுத்துவீணுய்
ஏனினிநிற்கின்ருய் முன் எந்தன்கைவாளாலுன்னை
வாளினில்தூக்கிவெட்டி வதைக்குரேன்சமர்க்குப்போடா.

கும்பகர்னன் சொல்லுகிற வசனம்.

கேளும் அண்ணுவே! உன்னுடைய உத்திரவு பிரகாரம் சண்டைக்குப் போகிறேன்; ஸ்ரீராமபிரான் கோதண்டத்தினுல் நான் கண்டிப்பாய் இறந்துவிடுவேன்; இலட்சுமணப்பெருமாள் கையால் உன் குமாரனுகிய இந்திரசித்து மாளுவான்; அதன்பின்பாகிலும் நீ சீதையைக் கொண்டுபோய்விட்டு சரணமடைந்து சுகப்படு; இல்லாவிட்டால் நீயும் இறந்துபோவதுடன் நமது கூட்டமும் குலமும் அழிந்துப்போகும் அண்ணுவே.

பொது வசனம்.

கும்பகர்னன் இராமர்பேரில் சண்டைசெய்ய வருகும்போது விபீஷணர் கண்டு சுவாமிக்கு இவன் பிரலாபத்தைக்கூற, அதன் பின்பு பகவான் உத்திரவின்படி கும்பகர்னனை தம்மோடு அழைக்க வந்த தம்பியாகிய விபீஷணனுக்கு நீதிகூறி ராமரிடம் அனுப்பிவிட்டு சண்டைசெய்கிற விதம்காண்க.

இராமருக்கும் கும்பகர்னனுக்கும் சண்டை.

கும்பகர்னன் கந்தார்த்தம்.

குரங்குகள்தன்னைக்கூட்டிக் கொண்டுவந்தெதிர்த்தூராமா
தரங்கவாருதிசூழிந்தத் தரணியாளிலங்கைவேந்தன்

வரங்கொள்ராவணனுர்தம்பி வந்திட்டேன்கும்பகர்னன்
உரங்கிடவேண்டாஞ் சண்டைக்குவருகுவாயே.

## கும்பகர்னன் தரு.

ஓடியென்னேடுவருவாய் உந்தன்சமர்த்தை
நாடியெனக்குத் தருவாய்
ஆடிடும்பம்பரம்போல் ஓடிப்போகவேவில்லில்
கோடிக்கோடியாய்பாணம் ஊாடிவிடுத்தனிதோ ஓடி

## இராமர் சொல்கிற கந்தார்த்தம்.

அன்பானவிபீஷணர்க்குத் தம்பியென்று
ஆதரிக்கயெண்ணியுன்னை யழைத்தபோது
மன்னவனும்ராவணனைப் புகழ்ந்துநீயும்
மதங்கொண்டுயென்மீதில் சமர்க்குவந்தாய்
இன்னமோரரைக்ஷணத்தில் வுன்னைவாட்டி
எமன்பதிக்குசேர்க்காமல் விடுவேனுகில்
என்னைத்தான்ராமரென்று துதிப்பாரோசொல்.

## இராமர் தரு.

எடுத்தேன்கோதண்டத்தைப்பாராய் இடிபாணம்
விடுத்தேன்மார்புக்கிதோ நேராய்
படுக்குப்படுக்கென்றிதோ ப்ராணங்கள்வருகுது
தடுக்கத்திரமுண்டானல் தப்பிபிழையிப்போது எடு

## கும்பகர்ணன் தரு.

நில்லடாமானிடராமனே உன்னை
நிமிஷங்கொண்டேகுவான் எமனே
புல்லாகயென்னையெண்ணி போர்செய்யவந்தாயோ
வில்லாளிநீயானல் விடுவிடுபாணத்தை

வீரிடவேமார்பைக் கீரிடவேரத்தம்
பீரிட்வேபுத்தி மாரிடவாட்டுவேன் நில்

## இராமர் தரு.

வாட்டுவேனென்றஉன்கையை துண்டாய்
வாங்கினேன்பாரெந்தன் மெய்யை
காட்டும்மம்புருதுணி கவசத்தைப்பொடிசெய்தேன்
ஓட்டுஞ்சாரதிரதம் உடையவேசரம்யெய்தேன்

ஓவென்றுராக்ஷதர் ஆவென்றுசாகவே
காவென்றுகூளிபேயே நின்றுபோகவே வா

கும்பகர்ணன் தரு.

போகயென்னிருகையைவெட்டினுய் ராமா
பொடியாக்கிரதந்தன்னை தட்டினுய்
நாகசேனையைக்காலால்நசுங்க உதைத்துக்கொன்றேன்
காகத்தைப்போலென்முன் கத்தாதேவானின்றேன்
காட்டினுலும்வாயால் திட்டினுலும்வாளால்
வெட்டினுலுமுன்னை விட்டுவிடுவேனே போ

இராமர் தரு.

விடுவேனேவென்றவுன்காலை துண்டாய்
வெட்டினேன் பாரதின்மேலே
கடுமைப்பேசியவுந்தன் கைகாலருந்தபின்பு
கொடுமைவிடடாகும்பகர்ண தெரிந்துமுன்பு
கூடியராவணன் தேடியபழிக்குநீ
நாடிமடிந்திட ஓடியேவந்தாயோ விடு

கும்பகர்னன் கைகாலருந்த பின்பு பூமியில் பிரண்டு
சண்டை செய்கிற சிந்து.

கையுங்காலுமருந்திடவே - கும்பகர்னன் - கடகடகட வென்று பிரண்டுருண்டு - வானரப்படையை மடித்தான் - சிலரை - வாயினுற் கவ்விகவ்வியுயிர்குடித்தான் - சல்லடைக் கண்கள்போலே-உடலெங்கும் - சரபாணந்தைத்தபுண்ணில் ரத்தம்வடிய - துள்ளிதுள்ளி குதித்தான் - பூர்வக்கியானம் - தூங்கா விளக்கைப்போலே பாங்காய் வரவே-தம்பி விபீஷணனேவாவா-தயவாகயானுரைக்கும்புத்தியைக் கேளு-பகவான் ராமன்கையால் - ராவணன்பட்டுவிடுவான் - யானுந் திட்டெனச்சாவேன் - இனிமேலாகிலும்நீ - பெரியண்ணன்-இடத்தினில் போகாதே மடத்தனமாய்-எள்ளுந்தண்ணீர் எங்கட்கிரைத்து-ஸ்ரீராமன்-பிணையடிதுணைகொண்டு வாழ்குவாயே—தந்.

கும்பகர்னன் முண்டமாய் உருளக்கண்ட
விபீஷணர் புலம்பல் தரு.

ஐயையோயண்ண அறிவுள்ளகும்பகர்ண
அடிக்குதேவுடல் துடிக்குதேநெஞ்சம்
இடிக்குதேபேய்கள் கடிக்குதேவுன்னை ஐ

பாவியென்னுடன் ஏன்பிறந்தாயண்ண
பத்துதேவயிர் சுத்துதேதலை
கொத்துதேகழு கத்துதேனய்கள் ஐ

வாவென்றுன்னை வணங்கியழைத்துநான்
வண்ணமாகவே அண்ணன்ராவணன்
ஏண்ணும்போல்சமர் பண்ணுவேனென்ருய் ஐ

கும்பகர்ணன்தலை கொய்வாய்கோவிந்தா
கூடிபிறந்தயென் நாடிநரம்புகள்
ஆடுதேவெட்ட மோடியேன்சுவாமி ஐ

வசனம்.

பகவானாகிய ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியே என்னோடு ஒரு தாய் வயிற்றில்பிறந்த அண்ணனாகிய கும்பகர்னனாகையால் அவன் கை கால் வெட்டுண்டு இரணக்களத்தில் உருள இதோபாரும் என் சரீரம் துடிக்கின்றது இனி தாமதிக்காமல் உமது கோதண்டத்தில் ராமபாணத்தைப்பூட்டி தலையை துண்டித்துப் போடும் ரகுநாயகரே.

இராமர் கும்பகர்னன் தலையை அறுப்பது
கந்தார்த்தம்.

அன்புள்ளவிபீஷணரும் அழுதுச்சொல்ல
அண்டரெண்டங்கிடுகிடென்ன ராமச்சந்திரர்
தன்னுடையகோதண்டந் தனைவளைத்து
தாவியேராமபாணந் தொடுக்க
மன்னவனுங்கும்பகர்னன் தலையைவெட்டி
மகத்தானசமுத்திரத்தில் போட்டபோது
பன்னரியதேவரெல்லாஞ் சந்தோஷித்து.

பரிந்துமலரைத்தூவினர்—தலையசைத்து
பகைவிட்டுதென்று தாவினர்

அரியாம்ராமரைப்போற்றி அனந்தவரங்கள்பெற்று
நெரியாய்வைகுந்தமேவி நிலைத்தான்கும்பகர்னனும் பரி

பொது வசனம்.

விபீஷணர் வேண்டுகோளின்படி இராமர் கும்பகர்னன் தலையை அறுத்து கடலில் விழும்படிச்செய்ய அக்காலையில் சீதாங்கனி யம்மன் திருச்சடையுடன் அசோகவனத்தில் வருகிறவிதங் காண்க.



4

சீதாங்கனியம்மன் வருகிற கவி.

இலங்கைவாழ்ராவணேசன் எடுத்துமேவருகயானுங்
கலங்கிட அனுமதேவன் கணையாழிவாங்கிராமர்
தலமதில்சேர்ந்தோனின்னம் தான்வராதிருக்கயேங்கி
குலவியவனத்தில்சீதாங் கனிகொலுவாகினளே.

சீதாங்கனியம்மன் வருகிற தரு.

சித்திரமாவுரிகள் மெத்தபிரகாசம்வீச
சீதாங்கனியம்மன்வந்தேன் ஜெயலட்சுமி சீதா

தித்திமியெனவேதேவர் திரண்டுபூமாரிபெய்ய
திரிச்சடையும்மனதைத் தேற்றிதுதிகள்செய்ய

திங்களேநேர்முக மங்கைசிரோன்மணி
பங்கஜமீதமர் பாவைமனோன்மணி சித்திர

வந்தோங்கைகேசிமாமி வாக்கியந்தவருமல்
வனத்தில்பதினாலாண்டுமே வனவாசம்செய்ய வன

மந்திரமாரீசன்மானாய் மயக்கயானுமிரண்டு
மன்னன்ராமனரயேவமைத்துனன்பின்யேகக்கண்டு

மாட்டியபூமியோ டாட்டியேராவணன்
கூட்டிதேர்மேல்வைத்து மேட்டியாய்வந்தான் சித்திர

வரும்வழியில்ஜடாயு வளைக்கராவணன்பாவி
வதைத்துசிரகைவெட்டினான் கொடியதுரோகி வதை

கருணையுடையநாதன் காணும்வரையில்தானே
காலன்பதிபோகாமல் கன்னிவரந்தந்தேனே

கப்பிய தென்கடல் ஒப்பமுடனே தாண்டி
செப்புலங்கைவனத்தில் வைப்பேனென்றோடினார் சித்திர

அசோகவனத்தில்வைக்க அரிவையழுகும்போது
அனுமந்தன்மனந்தேற்றினான் அஞ்சாதேயென்று அனு

தசமுகராவணனை தாவிமடிப்போமென்று
தாவுங்கணையாழிவாங்கி தாண்டினான் கடலன்று

தத்திவராமையால் பத்துதேயென்வயிர்
சுத்தகணவன்விட்டு தூங்குமோகண்ணுயிர் சித்திர

வசனம்.

கேளுமம்மா திரிச்சடையே! சண்டாளனாகிய ராவணேஸ்வரன் என்னை பூமியோடு பேர்த்து எடுத்துவந்து இந்த அசோகவனத்தில்

யத்துமாதகாலம் சிறையில் வைத்தபடியால் நான் படுங்கஷ்டத்தை என்ன சொல்லுவேன் திரிச்சடையே.



விருவிடை-சீதையம்மன் புலம்பல் தரு.

அம்மாநான்பெண்பிறந்த அவதியைச்சொல்வோமென்றால்
அடிவயர்பற்றுதையோ திரிச்சடையே

திரிச்சடை தரு.

சும்மாயிருந்தாயே சுகமுண்டுனக்குப்பின்னால்
சோங்கியழுகவேண்டாம் சீதையம்மா

சீதையம்மன் தரு.

தொட்டொருவன்எடுத்து விட்டான்எந்தனையென்று
சுவாமிவரமாட்டாரோ திரிச்சடையே

திரிச்சடை தரு.

கட்டழுகியேவாயை விட்டழுகாதேயுந்தன்
கணவன்ராமர்வருவார் சீதையம்மா

சீதையம்மன் தரு.

பாராயெதிரில்பல்லி பலுக்குதிதன்விபரம்
பகருவாய்எந்தனுக்கு திரிச்சடையே

திரிச்சடை தரு.

வாரிவதிகட்டி வானரப்படையுடன்
வந்துராவணன்முடி சிதைப்பார்சீதா

சீதையம்மன் தரு.

சந்தேகஞ்சொல்லும்வார்த்தை சாமிவருவதேது
சாஸ்திரம்மெய்யோபொய்யோ திரிச்சடையே

திரிச்சடை தரு.

குந்தகமில்லைநாளை கொல்லுவார்ராக்ஷதரை
குளிரக்கேழ்க்கவேபோராய் சீதையம்மா

பொது வசனம்.

சீதாங்கனியம்மன் திரிச்சடையோடு புலம்பிக்கொண்டிருக்கையில் இராவணேஸ்வரன் சீதையம்மன்மேல் மோகமாகி அசோக வனம் நாடி வருகிற விதங்காண்க.

இராவணன் கவி.

கருத்துள்ளமகோதராகேள் கண்ணதுமிமைக்குமுன்னே
மருத்துவன்தன்னைக்கூவி மாயமாய்ஜனகனாக்கி
திருத்தமாய்சீதைமுன்னே திட்டியேகட்டிவாட்டி
வருத்துவாய்யானுமிப்போ வருகிறேன்வனத்திற்குனே.

வசனம்.

எனது முதல் மந்திரியாகிய மகோதரனே கேளும் மருத்துவனென்கிற ராக்ஷதனை சீதையினுடைய தந்தை ஜனகராஜனைப்போல் மாயதந்திரத்தினல் செய்து அவனை இருபுஜங்களும் நசியும்படிக் கட்டி சீதையம்மன் முன்பு இழுத்துக்கொண்டு போய் ஒரே வெட்டாய் வாளினல் வெட்டிப்போடும்; நான் உடனே அசோக வனத்திற்கு வருகிறேன் மந்திரி.

மகோதரன் வசனம்.

தங்கள் உத்திரவின்படியே செய்துவிட்டேன் இலங்கேசனே.

இராவணன் அசோகவனம் நாடிவருகிற தரு.

ஆஹாசீதை மாதைக்கட்டி
அணைந்துவருகுரேன்—முத்தம்
துணிந்து தருகுரேன்

பாகார்மொழியாள் என்னைக்கண்டு
பயந்துவருகுவாள்—சுகத்தை
தயந்துத் தருகுவாள்

ஏகாந்தமாய்அத்தர் பன்னீர்
எடுத்துப்பூசினேன்—இருகரம்
பிடித்து வீசினேன்

நாகாபரணன் வந்திட்டாலும்
நான்விடுவேனோ—கூடாமல்
தான்விடுவேனோ ஆஹா

## இராவணன் சீதையைக்கண்டு மோகித்தல்.

### திருப்புகழ் சந்தம்.

கண்ணேயென்கண்மணியே கற்கண்டேசர்க்கரையே
கனகமயிலேபெண் குயிலே

மண்ணேறுந்தசரதன் மைந்தன்ராகவனினிமேல்
மரகதமே வருவதேது

குண்ணுதசண்பகமே ஜனகராஜன்மாதே
கூடிமதன் போடுங்கணேயால்

விண்ணேறுவானவர்கள் தண்ணமுதேஜாளகியே
வேலேயெனே சேரவருவாய்

### இராவணன் தரு.

சித்திரவிழிமாதே கண்ணேபெண்ணே
சீதாங் கனியாளே
சத்ராதிபோல்மதன் ஜாடுருன்பாணத்தால்
சரஸஞ் செய்யவாராய் சித்

ஆசையாய்வுன்னேச்சேர தூக்கிவந்
தசோகவனத்தில் வைத்தேன்
பாசைநிகர்குழல் பாவையேஜானகி
பண்பாய்யெனேச் சேரடி சித்

மூன்றரைக்கோடிவரம் பெற்றதீரன்
முடிவணங்கினேன் பெண்ணே
வான்மதியேமுத்தம் வந்துதருகுவாய்
வாவென்றெனே யழைத்து சித்

திரிச்சடையேமகளே சீதைக்குநீ
தேருதலேச் சொல்லி
பரிவாய்யெனேச்சேர பண்ணுவாய்கண்மணி
பாதம்பணிந்தே னம்மா சித்

### சீதையம்மன் கவித்துறை.

மூடர்க்குள்சுத்தமுழுமூடனே எந்தன்முன்னில்நின்று
ஆடெடுத்தக்கள்ளன்போலே விழிப்பதிலாவதென்ன
சீடத்தையிச்சிக்குநாய் மரமேறிசிவந்தகனி
பீடத்தைதின்றுருசிபார்க்குமோ பித்துகொண்டவனே.

### வினவிடை இராவணன் தரு.

சீதாயெந்தனைச்சேரடி மானேதேனே சீதா
சீதாஎந்தனைச்சேரவாதா உனக்கிப்போது
பாதாரவிந்தந்தன்னை ஆதாரமாய்ப்பணிந்தேன் சீதா

### சீதையம்மன் தரு.

போடாராக்ஷதத்துரும்பே சீச்சிஎட்டிப் போ
போடாஅறிவுகெட்டமூடா வுனக்கீதென்ன
கேடாயழிவுவந்ததோடா எந்தனைவிட்டு போ

### இராவணன் தரு.

காமாஞ்சிதக்குயிலே கண்ணேபெண்ணே காம
காமன்கணையால்வாட தாமதித்திருக்காதே
சோமசுந்திரசீதா நீமனம்வையடி காம

### சீதையம்மன் தரு.

கெட்டுபோகாதேநில்லடா அடாதுரோகி கெ
கெட்டுப்போவாய்ராவணா விட்டிற்பூச்சிபோல்துள்ளி
பட்டுப்போவாய்சுவாமி தொட்டக்கோதண்டத்தாலே கெ

### இராவணன் கவி.

முக்கனியேசர்க்கரையே பாலேதேனே
முதிராதகற்கண்டே பாகேஞானங்
கக்காதமுத்திதரும் பீடமேயென்
கண்மணியேவிண்மணியே சீதைமாதே
நத்தியொறுமுத்தம் தந்தணைந்தாயானால்
நாடானயிலங்கைநகர்க் கரசியாக்கி
வைத்திருப்பேன் கைநழுகவிட்டிடாதே
வஞ்சியர்க்குள் ரஞ்சிதமேவாவாநீயே.

### சீதையம்மன் சொல் தரு

கெட்டுபோவாய்யென்னைவிட்டுப் போடாதூர
மட்டியேராவணப்பேயா சிங்கக்

குட்டிபோல்வந்திடும்மாயா வாய்ப்
பட்டியாய்பேசாதேதுயா என்னைத்
தொட்டால்சாவாய் பெருவாயா

சுட்டனுமான்விட்டு விட்டானென்றெண்ணுதே
கட்டழகிசாபங் கார்க்குமெய்குண்ணுதே

இராவணன் தரு.

தூண்டாமணிவிளக்கே யுன்னைச்சேரநான்
தாண்டிவந்தே னடிமாதே-மதன்

தூண்டுறுன்யென்செய்குவேன் கோதே-என்னை
ஆண்டுக்கொள்ளுவாயிப்போதே மையல்
மூண்டுதெனக்கிப்போ வாதே

மாண்டுப்போகாதமுன்மையலைத் தீரடி
வேண்டிக்கொண்டேன்காம வெப்பம்பொல்லாதடி தூ

சீதையம்மன் தரு.

ஆக்ரமசிங்கநான் பார்க்கின்றநீயொரு
சாக்கடைக்குள்நரிக்குட்டி என்னை
பார்க்கலாமோகண்ணால் யெட்டிமுக
வேர்க்காதேராக்ஷத மட்டிநீ
ஆர்க்கும்பொல்லாதவன் கெட்டி
தாக்கிடுராமர் தனக்குபெண்சாதியே
நீக்குமுனக்கு நிகழ்பச்சைநாவியே ஆக்

இராவணன் தரு.

பத்துவாயாலும்நான் கத்தியுங்கேழ்க்காத
வித்தையெங்கேகற்றாய்சீதா ஒரு
முத்தந்தருகலாகாதா உந்தன்
சித்தமிரங்காதேன்வாதா அடி
பத்தினியேகொங்கை தாதா
நத்திநடேசன் நவில்பதம்பாடியே
வெற்றியுடன்விளை யாடுவோங்கூடியே பத்

சீதையம்மன் கந்தார்த்தம்.

பத்தினியாம்சீதை என்னைதூக்கிவந்து
பத்துமாதம்சிறையில் வைத்தபின்பு
புத்திகெட்டுகற்பழிக்க வந்தாய்துரோகி
புகழாய்தன்பெண்பேரால் நிலத்தைவைத்து
ஒத்தொருவன்மணஞ்செய்த பின்புசொந்த
உரியமகன்பேராலே மாத்திக்கொண்டோன்
செத்துசுடுசாம்பலாய் குடும்பத்தோடே

சீதையம்மன் தரு.

சீரணிப்பதைபோல்பாவி உன்குலமும்
செழிக்காமல் சாகுமேகூவி

தாரணியில்யென்சாபம் தப்பாதுதப்பாதுசத்தியம்
ஆரணிகிவன்மேலாணே அவன்போலழுவாய்நிக்ஷயம்

இராவணன் கந்தார்த்தம்.

பெண்பேரால்நிலத்தைவைத்து மாத்திக்கொண்ட
பேயனுக்குமெனக்குமிப்போ சாபந்தந்தாய்
மண்ணுதரத்தினமே ஜனகராஜன்
மாதவத்தில்வந்துதித்த சீதைமாதே
கண்ணினல்யென்முகத்தைப் பார்க்கொணுதோ
காமசரங்கொண்டுமதன் வீசுகின்ருன்
தண்ணமுதேயிதுசமயம் தயவுசெய்து

இராவணன் தரு.

தழுவியெந்தனைக்கூடுவாய் உனதுபாதம்
தன்னில்விழுந்தேன் நாடுவாய்
அழியாதவரம்பெற்ற ஆண்டவன்ராவணனென்னை
பழியானவார்த்தைசொல்ல பாவையேமனம்வந்ததோ தழு

திரிச்சடைக்கும் சீதையம்மனுக்கும் ராவணனுக்கும் தர்க்கம்.

சீதையம்மன் தரு.

அம்மாதிரிச்சடை யசோகவனந்தனிலென்னை
அழைக்கவருகின்ருனே ராவணன்பாவி-நான்
யாரைநினைந்தழுவேன் வாய்விட்டுக்கூவி

திரிச்சடை தரு.

கூவியழுகாதேயென் ஆவிஜானகிதாயே
குறைவருகாதுமனந் தேருவாயம்மா-தாயே
நிறைகுடந்தளும்புமோ நீசொல்வாயம்மா

இராவணன் தரு.

தம்பிவிபீஷணன்பெற்றதாயே திரிச்சடையே
தையல்சீதையைச்சேர தான்சொல்வாயம்மா-நீ
தாமதித்தாலேவுயிர் தரிக்காதுசும்மா

சீதையம்மன் தரு.

உயிர்தரிக்காதென்ருய் உத்தமிகள்சாபமது
உடனேபலிக்குமடா சண்டாளா-சீச்சீ
கெடுவாய்கெடுவாய் சொன்னேன்திண்டோளா

திரிச்சடை தரு.

திட்டாதேராமரவர் விட்டிடுங்கோதண்டத்தால்
பட்டுமுறிவானம்மா ராவணன்பாவி-உன்னை
தொட்டாலெரிந்துபோவான் சண்டாளத்துரோகி

இராவணன் தரு.

கண்ணொளியுமாறுதடி விண்ணமுதேஜானகியே
கட்டியணேகுரேன்பா ரிப்போதே-உன்னே
விட்டுப்போகவந்தேனே பூங்கோதே

சுகசாரணர்கள் கவி.

ஐயனேயிலங்கையாளு மதிபதிராவணேசா
நையவேகும்பகர்னன் ராமன்கையம்பினலே
பையவேயிறந்துவிட்டார் பதறுதேதிரேகமெந்தன்
கைகளும்உதறுதிப்போ கர்த்தனேயறிகுவீரே.

வசனம்

சரணம் சரணம் சுவாமி ராவணேஸ்வரனே! உமது தம்பி யாகிய கும்பகர்னன் மானிடப்பையலாகிய ராமன் கைபாணத்தி னலே இறந்துவிட்டார். அதை தங்களுக்கு தெரிவித்தோம் மகா ராஜனே.

இராவணன் புலம்பல் தரு.

ஐயோகும்பகர்னுதம்பியே அழிவிட்டாயோ-ஐ
பையல்ராமன்கையம்பாலே பரகெதியடைந்திட்டாயோ
வையகத்திலெப்போதுகாணுவேன் அடடாதம்பி-ஐ

வேணபுத்தியெனக்குரைத்தாயே கும்பகர்னு-வே
ஆணவத்தினலுன்சொல்லே அலக்ஷியம்செய்தேனேதொல்லே
பாணங்தைத்தமான்போலானேனே அடடாதம்பி-ஐ

சீதையைவிடுநீயென்ருயே ராமரிடத்தில்-சீதை
பேதைமதியாலேயந்த பேச்சையுங்கேளாமலிந்த
வாதைப்படகாலமாச்சுதே உன்னேப்பிரிந்து-ஐ

இப்போதேசீதையைவிடுகுரேன் ராமரிடத்தில்-இப்
செப்பருமவர்பாதத்தில் சேவித்துபிழைத்திடுவேன்
தப்பிதமினினன்செய்வேனே நீபோனபின்பு-ஐயோ

மகோதரன் ராவணனேக் கலேத்தல் கவி.

அந்திரதேவர்போற்று மையனேயிலங்கைமூர்த்தி
இந்திரசித்திருக்க ஏக்கமேனுந்தனுக்கு
விந்தைசேர்ராமன்மீது விடுத்திட்டாலவனேக்கொன்று
உந்தனுக்கொருக்ஷணத்தி லுரைப்பான்மெய்யறிகுவீரே.

இராவணன் வசனம்.

ஆஹா ஹா! எனது ஆருயிர் மந்திரியாகிய மகோதரனே! உன் புத்திசாலித்தனமேதனம் சந்தோஷம் சந்தோஷம் இப்போதே என்

குமாரனாகிய இந்திரசித்தை தூதுவர்களால் அழைத்து வாரும் மந்திரியே.

இந்திரசித்து வருகிற கவி.

தந்தைராவணனழைக்கத் தருமணிபணிகள்பூண்டு
சுந்திரநாகபாசம் சுடர்பிர்மாஸ்திரமுமேந்தி
மந்திரிமார்கள்சூழ மாயமந்திரஞ்செபித்து
இந்திரசித்தன்தேர்மேல் ஏறிதோவருகின்றானே.



இந்திரசித்து வருகிற தரு.

அண்டரெண்டங்கிடுகிடென்ன அதட்டிப்புஜத்தைத்தட்டியே
கண்டவர்நடுங்க இந்திரசித்தன் கத்திவருகுரேன்
தெண்டுதோமரவில்வாளுந் திரண்டவில்லுந்தூணியும்
பிண்டிபாலவாளுங்கையில் பிடித்துவோடிவருகுரேன்
இந்திரனைகுத்திசிறையில் இட்டேன்மற்றதேவரை
தந்திரத்தினால்பிடித்து தாவிவிலங்கைப்பூட்டினேன்
எழுகடலையுமெடுத்துகுடிப்பேன் எதிர்த்தப்பேரைவாறியடிப்பேன்
பழுதில்லா தகதிர்மதிதன்னைப் பதைக்கப்பிடித்துநசுக்குவேன்
உலகந்தன்னைபாயாய்சுருட்டி உயரத்தூக்கியெறிகுவேன்
பலத்தினாலேமேருகிரியைப் பத்தித்தூக்கித்திருகுவேன்
எந்தன்கையில்நாகபாசம் இருக்கபிரமாஸ்திரமுமே
குந்தகம்யெனக்குண்டாமோ கூறுவாய்நீமந்திரி
மந்திரத்தினாலிலகை மயக்குவேன்நிமைக்குள்ளே
கந்தன்மால்சிவன்வந்தாலும் பக்கத்திலிடுக்குவேன்-அண்ட

இராவணனைத் துதித்தல் கவி.

அருந்தவஞ்செய்துபெற்ற அய்யனேயிலங்கைநாதா
கருணையோடுமதுமைந்தன் கழலடிபோற்றினேனே.

இராவணன் கவி.

வந்தடிபணிந்துநின்ற வாகுள்ளபாலனுன
இந்திரசித்தேகேளாய் இக்கணவிரைவிலேகி
தந்திரத்தாலேராமன் தலையறுத்துடனெனக்கு
சந்தோஷமுடனேசொல்வாய் சமயமேவிடைதந்தேனே.

இந்திரசித்து வசனம்.

ஆஹா அவ்வாறே ஜெயித்து வருகிறேன் தந்தையாரே.

அனுமாருக்கும் இந்திரசித்துக்கும் சண்டை.

இந்திரசித்து கந்தார்த்தம்.

கருங்குரங்கேயனுமந்தா சொல்லக்கேளாய்
கண்டவுடன்பல்லிளித்து வாலைநீட்டி
இருமாந்துதலையசைத்து வாயைமென்று
இருப்பதினுல்நான்பயந்து போவதுண்டோ
தருதலையேயுன்னையிரு துண்டாய்வெட்டி
தாவிவருராமலட்சுமணனைக்கொன்று
வருகின்றகுரங்குகளை பதமேசெய்து

வதைக்குரேன்மூடா—பாணத்தினுலே
சிதைக்குரேன்வாடா

கொதையையிழுத்துப்பூட்டிக்கொண்டு வில்லைவளைத்தேன்
பதைக்கவுனதுமார்பைபல பொத்தலாய்துளைத்தேன்

அனுமார் கந்தார்த்தம்.

மார்பினைத்துளைக்கவிட்ட மடையனேவுனதுயம்பை
பார்க்குரேன்வொருகையிப்போ பலேபலேசுத்தவீரன்
ஆர்க்குனீயாகையாலே அகங்கொண்டுசமர்க்குவந்தாய்
வேர்க்குது முகங்கையாலே

வெகுண்டுக்குத்தினேன்பாரடா இந்திரசித்தே
விழுகாதே கீழேசுறடா

அகண்டுப்போகவேவுன்னை ஆகாவிடுவேனேசொல்லு
ஜெகஜாலங்கற்றேமென்று திரியாதடாநில்நில்

இந்திரசித்து தரு.

அண்டருங்கண்டுநடுங்க மண்டலத்துள்ளோரொடுங்க
அர்த்தசந்திரபாணங்கையில் எடுத்தேனே

தண்டமுந்திரிமுகாஸ்திரம்தாவிய பஞ்சமுகாஸ்திரம்
தநும்பவச்சிரமுகாஸ்திரந் தொடுத்தேனே

மண்டியகெஜ கர்ஞஸ்திரம்
மார்புக்கு அஞ்சலியாஸ்திரம்
கண்டாயோ பத்மமுகாஸ்திரம்
சுங்கைபத்திர பாணமிது

கண்டிக்குமே யுன்னை
துண்டிக்குமே யடா
வண்டக்குரங்கே நீயும்
சண்டைக்கு வாடா

அநுமார் தரு.

சண்டைசெய்துதேவேந்திரன்தன்னை சிறைவைத்தவுன்
சமர்த்தையும்நொடிக்குள்ளே பார்க்குறேன்
மண்டையுஞ்சிதரக்குத்திகண்ட பேரெண்டங்கள்தின்னே
மறலிபதிக்கியுன்னை சேர்க்குறேன்

மட்டுமட்டில்லாத பாணம்
விட்டுவிட் டனுப்பினும்
தொட்டுதொட்டு முறித்தேன்பார்
கட்டுகட்டு வுன்கடையை

கதிக்காதே வீணாய்
குதிக்காதே புவி
மதிக்காதே தானே
துதிக்காதே மூடா சண்

இந்திரசித்து தரு.

அக்கினிபொறிபறக்க உக்ரகோபங்கொண்டுமீறி
அதட்டிவாணத்தில்தூக்கி எறிந்தேனே
சக்ரவாளபக்ஷியைப்போல் திக்கெனரதத்தின்மீது
சரபாணங்கோடிகோடி சொறிந்தேனே

சப்தசாகர மொன்றாய்
ஒத்துயெழுந் ததைப்போல்
சுத்துங் குரங்குபடை
முற்றும் நாசமடைய

மூட்டினேன் சாகக்
காட்டினே னடா
வாட்டினே னிதோ
ஓட்டினேன் பாராய் அக்

## அனுமார் தரு.

ஓட்டிடசமர்த்துண்டானால் காட்டடாகையிருப்பை
உருத்துப்பார்க்காதே இந்திரசித்தனே
காட்டுக்குரங்கல்லவோதீ மூட்டியதிலங்கையிலே
கருதிப்பார்ராக்ஷத பித்தனே

கரியும் பரியுந்தேரும்
நெறியக் குத்தினேனடா
குறியாய் உயிர்பிழைப்பாய்
பரிவாய் சொல்லடாமூடா

பட்டிடவே உயிர்
விட்டிடவே இதோ
சொட்டிடவே ரத்தம்
கட்டிட வாட்டுவேன் ஓட்

## பொது வசனம்.

அனுமாரும் இந்திரசித்தும் உயுத்தியம்செய்து ஒருவருக்கொருவர் தோற்காததைக்கண்ட லட்சுமணர் கோபமாகி அனுமந்தனை தனக்கு வாகனமாக்கிக்கொண்டு இந்திரசித்துடன் சண்டைசெய்கிற விதம்காண்க.



லட்சுமணருக்கும் இந்திரசித்துக்கும் சண்டை.

லட்சுமணர் தரு.

வாடாயிந்திரசித்தனே வதைக்கிறேனுந்தனே
பதைக்கப்பதைக்கக் குத்திவாடா
மூடாவுனதுஅத்தை மூக்குந்தனமருத்தேன்
முகத்தில்மீசையுண்டானல் வாடாமனம்பொருத்தேன் வா

இந்திரசித்து தரு.

பொருப்பனேகோபவி லட்சுமணவுன்னே
பொடிபொடியாக்குரேன் லட்சுமண
சிறுபிள்ளேயென்று சிரித்துவில்லெடுக்குருய்
ஸ்ரீராமன்தம்பியென்றே எண்ணிமுடுக்குராய் பொ

லட்சுமணர் தரு.

நீதானேமேகநாதன் நீட்டுங்கைவில்லேதுண்டாய்
வாட்டுறேன் பாரடாநீதா
பீதாம்பரமணிந்த பெருமாளின்தேவியை
பித்தனேதொட்டபழிக்கு வாங்குவேனுவியை நீதா

இந்திரசித்து தரு.

ஆவியைவாங்கநீ தீரனே-புவி
ஆருக்குமஞ்சாத வீரனே
த்ாவியொருவன்தூக்கும் தேவிசீதையையினி
கூவியழைப்பதிலும் ஆவிபோக்கலாம்மானி ஆவி

லட்சுமணர் கந்தார்த்தம்.

மேகத்தில்மறைந்துபாணம் விடுக்குருய்படடாநில்லு
காகத்தைப்போல்கத்தாதே கண்டித்தேன்பாணமெல்லாம்
சாகத்தான்போராய்கீழே சடுக்கெனயிறங்கிவாடா
ஆகத்தைப் பிளக்கவேண்டி

அடிக்கடிபாணமெடுத்தேன்—அண்டகடாகம்
வெடிக்கத்துடிக்கவிடுத்தேன்

படிக்குள்ராக்ஷதர்கண்ணீர் வடிக்கத்தேவர்களித்து
நடிக்கபூதபேய்ரத்தங் குடிக்கக்கோபமீறி அடி

இந்திரசித்து நாகபாசத்தால் கட்டுதல் கந்தார்த்தம்.

கணக்கில்லாபாணம்விட்டேன் கண்டித்தாய்நீயுஞ்சேனே
பிணமதாய்போககையில் பிடித்திட்டேன்நாகபாசம்
குணத்தொனிசெய்துவில்லில் கூட்டியேவிட்டுவிட்டேன்
சுணங்கிநீவிழாமல் நின்ருல்

சுத்தவீரனும்நீயடா—கீழேவிழுந்தால்
சோம்பேறிப்பையன்தானடா

கத்திநாகவாலினுனே கட்டியேசுருட்டுதுபார்
சித்தர்முனிதேவர்மூவர் திடுக்கிட்டோடுகிறார்பார் சுத்

பொது வசனம்.

இந்திரசித்துவிட்ட நாகபாசத்தினுல் சுக்ரீபன் அங்கதன் லட்சுமணர் அனுமார் முதலானவர்களெல்லாம் மூர்ச்சையாகிவிட அதனைக்கண்டு விபீஷணர் புலம்ப அந்த சேதியை அனலன் என்னும் மந்திரியை இராமர்கேட்டு இந்திரசித்துவிட்ட இருள்பாணத்தை விலக்கி யுத்தகளத்தில் வந்துபார்க்க நாகபாசத்தினுல் மூர்ச்சித்தவரையும் லட்சுமணரையும்கண்டு புலம்புகிறவிதங் காண்க.

லட்சுமணரைக்கண்டு ராமர் புலம்பல் தரு.

ஐயோதம்பிலட்சுமணு என்னசெய்குவேன்-உன்னை
அரக்கன்கையில்கொடுத்து தனிக்கலானேனே

வையம்புகழயோத்தி வளர்நகர்விட்டு-நாமும்
வந்தகெதியிதுவோ தம்பிலட்சுமணு

பட்டகாலிலேபடுங் கெட்டகுடியேகெடுமென்ற
பழமொழிமெய்யாச்சுதே தம்பிலட்சுமணு

மூவருங்காட்டில்வந்து தேவிசீதைபோனபோதே
முடியாவிசனங்கொண்டேன் தம்பிலட்சுமணு

நீயும்பிரிந்துவிட்டால் நானெப்படிவுயிரை
நிலைக்கவைத்திருப்பேண்டா தம்பிலட்சுமணு

ஓரிக்குரிவியைப்போல் உங்களை பரிகொடுத்து
ஒண்டியாய்வயோத்திக்கு போவேனோதம்பி ஐயோ

பொது வசனம்.

தம்பிக்காக புலம்பிக்கொண்டிருக்கும் சமயத்தில் ஸ்ரீராமமூர்த்திக்கு ஒரு யுக்திதோன்றி தனக்கு வாகனமாகிய கெருடனை நினைக்க அதுதெரிந்து கெருடன் வருவது காண்க.

கெருடன் வருகிற கவி.

திருவளரயோத்திவாழுந் தசரதராமச்சந்திரன்
வருகவேநினைத்தபோது வாகுள்ளகெருடராஜன்
மருவில்லாசிறைவிரித்து மானிலம்நடுநடுங்க
கருணையோடிலங்கைநாடி கர்ச்சித்துவருகின்றனே.



கெருடன் வருகிற தரு.

தேவதேவாதிதேவன் தேவன்ராமரிடத்தில்
தெய்வக்கெருடனும்வந்தேன் இதோ
திக்கெனபாய்ந்துமே உக்கிரமதாக தெ

ஆவலாயிருசிறை அடிக்கும்வேகத்தினுலே
அஷ்டமாநாகமெனும் அரசர்துடிக்கமேலே
அண்டர்கள்வோங்க அரக்கரை
அழித்துயிர்வாங்க

அங்கத்திலேசர்ப்பம் சங்கையரவேபூண்டு
தங்கஞேப்போல்கழுத்தில் திரண்டவெள்ளைக்கொண்டு
விரிந்தக்காலினல்மண்ணு விண்ணைமூடிக்கொண்டு
பரிந்துமலைபோல் தாவியே-ஆஹா
பாரியவுலகெல்லாம் மீறிகிடுகிடென்ன பரி

உரியசூரியன்கோடி உதித்தாப்போல்தலைமேலே
உயர்ந்தரத்தினமுடி ஒளிவிடபலகாலே
உற்றுமேபார்த்து கண்ணினல்
நெற்றியும் வேர்த்து

ஓங்கியசுவாமியை நீங்கியவிசனத்தால்
தேங்கியேமனமது ஆங்காரமாக தே

கிழிந்துபாதாளத்தில் கிடக்கும்பாம்புகளுங்கண்டு
சுழண்டுதத்தளித்திடவே இதோ
கூடியபடவிரித் தாடிகீழ்போட்டு சுழ

பழிக்கஞ்சாராக்ஷதர் பண்ணக்கொடுமையாலே
பகவானுக்கென்னதுன்பம் பலித்ததோமென்மேலே

பார்க்குரேன்நானே அவர்குறை
தீர்க்குரேன்நானே

பத்தியயெழுகடல் வத்தியேதீயெழு
நத்தியமலைகளுந் தத்தியேகீழ்விழ தே

திடத்துடனேதெற்குத் திசையிலிருந்துபாய்ந்து
வடக்குத்திசையை நாடியே நா
வரண்டுமேகண்ணில் உருண்டுமேதீயெழ-வர

இடக்கண் இந்திரசித்து ஈடில்லாநாகபாசம்
இருக்கியிறந்தபடை எழுந்திடகண்டுநேசம்

இன்பமேகொண்டு சுவாமியை
அன்புடன்கண்டு

ஏத்தியேபூமலர் சாத்தியேராமரை
பார்த்துமேமுகமது வேர்த்துபரவசமாய் தே

இராமரை துதித்தல் கவி.

ஹரிகரிராமச்சந்திரா அண்ணலேபோற்றிபோற்றி
பரிவுள்ளநாகபாசம் படமதைகீழேபோட்டு
குரிகியேகட்டவிழ்த்துக் கொண்டதால்நமதுசேனை
நெரியுடன்வுயிர்பிழைத்தார் நீர்விடைதருகுவீரே.

வசனம்.

ஸ்ரீ அகிலாண்டகோடி பிர்ம்மாண்டநாயகா! ஆதிமத்தியானந்தரகிதா! சர்வஜீவதயாபர மூர்த்தியாகிய ராமச்சந்திரமூர்த்தியே! உமக்கு வாகனமாகியும் தொண்டனுமான கெருடன் இதோ கோடாகோடி வந்தனம் புரிந்தேன்; இந்திரசித்துவிட்ட நாகபாசம் என்னுடைய வாடைப்பட்டபோதே பொடிபொடியாகி இறந்துவிட்டபடியால் நமது சேனைகள் யாவும் உயிர்பெற்று எழுந்துவிட்டார்கள். ஆகையால் நான் போய் வருகிறேன் விடைதாரும் பகவானே.

இராமர் வசனம்.

அவ்விதமே போய்வாரும் கெருடராஜனே.

பொது வசனம்.

சகலரும் உயிர்பெற்றெழுந்தவுடன் அதிகாயனுடன் சண்டை செய்து வதைத்து அன்று ராத்திரியில் மகா ராக்ஷதர்களை ராமர் சேனை ஒழித்ததை இந்திரசித்து கண்டு ராவணனிடம் தெரிவித்து மறுபடியும் லட்சுமணர்மேல் யுத்தம் செய்கிற விதங்காண்க.

## லட்சுமணருக்கும் இந்திரசித்துக்கும் சண்டை.

### இந்திரசித்து கந்தார்த்தம்.

இராமனுக்கிளையதம்பி லட்சுமணுவாராய்வாராய்
எமனுமென்னைக்கண்டால் ஏகுவான்கண்காணுமல்
சோமனைப்போல்முகத்தை சுளுக்காமல்தளுக்குகாட்டி
நீமன மகிழ்ந்தசேதி

நிமைக்குள்காட்டுறேன்பாரடா வானரப்படை
தனையுவதைப்பேன்கூறடா

அமையும்நாகபாசத்தை அவிழ்த்தோங்கிகெருடனுலென்று
சமையங்கெர்வங்கொண்டாயோ ஜாடுறேன்யிந்திரசித்தானுல்

### லட்சுமணர் கந்தார்த்தம்.

இந்திரசித்தேவாடா இடும்பானவார்த்தைபேசி
வந்தாயோயினியுன்தந்திரம் வாய்க்காதுலங்கைசென்று
தந்தைராவணனுக்கேனல்ல தருமநீதிகளைச்சொல்லி
விந்தையாய் சீதைமாதை

விட்டுவிடநீசொல்லடா—விடுகாவிட்டால்
கெட்டுப்போவாய்நீநில்லடா

சுட்டுவிடுமுன்குலத்தை சுந்தரிசிறையிருந்தால்
கெட்டுப்போவாய்என்சொல்லை கேவலமென்றுநினைத்தால் விட்

### இந்திரசித்து தரு.

அண்டம்நடுங்கவுன்னை வாறியே-போக
அதட்டிச்சரந்தொடுத்தேன் மீறியே

துண்டனேவுன்மார்பைத் துளைத்தம்புபோகுது
துடர்ந்தக்குரங்குபடை கூடியேசாகுது

தூக்குவனேஆவி போக்குவனே
தாக்குவனேபொடி யாக்குவனே

தத்திக்கொதித்து ரத்தாரிதோவோடுது
கொத்திக்கழுகுபேய் தின்னுமேகூடுது அண்

### லட்சுமணர் தரு.

குட்டிசிங்கம்போல்துடைத் தட்டியே-உன்னைக்
கொல்லுவேன்ராக்ஷத மட்டியே

எட்டுதிக்கையும்வென்ற கெட்டிக்காரதனத்தை
விட்டுக்காட்டவந்தாயோ பட்டிடவுடலத்தை

வேருக்குவேனிரு கூருக்குவேன்
ஆருக்குவேன்ரத்த சேருக்குவேன்

வெற்றிவருமென்று புத்திகெட்டலையாதே
கத்தியென்பாணத்தால் செத்துநீதுலையாதே குட்

இந்திரசித்து தரு.

கத்தியலட்சுமணதீரனே—எனக்கு
கடுகவல்லவோநீயும்வீரனே

பத்தியமேகத்தில் பாய்ந்துகணைதொடுத்தேன்
பாரடாயென்வித்தை இருள்பாணத்தைவிடுத்தேன்

படுவாயடாசெத்து விடுவாயடா
கெடுவாயடாநீயும் முடிவாயடா

பட்டென்றுபூமியில் திட்டென்றுகுதித்துமே
விட்டேன்தீரமுண்டானல் கட்டடாபாணத்தை கத்

லட்சுமணர் தரு.

மேகநாதாயிந்திரசித்தனே—மாயம்
மேவுதடாயென்முன்பித்தனே

பாகமாய்ராவணன் பண்ணப்பழிக்குவுன்னை
பதிலாயனுப்பினனே பாருருறுகைமுன்னே

பரியுடனேசேனை கரியுடனேரதம்
முறிபடவேகாலாள் மெரிபடவாட்டுவேன்

பாவியுனக்காகவோ பதினாலுவருஷமாய்
பட்டினியாய்நித்திரை விட்டுயிருந்தது மேக

இந்திரசித்து பிரமாஸ்திரத்தால் கட்டுதல் கவி.

உண்ணமல்வுறங்காமல் பதினலாண்டு
ஓகோயிருந்தனென்று வெறும்பொய்சொன்னய்
மண்ணவரும்விண்ணவரும் நடுநடுங்க
மகத்தானவெழுகடலும் மணிநீர்வத்த
குண்ணியேயஷ்டகஜ வீரிட்டோட
கொடியமகமேருபடீ ரெனவெடிக்க
நண்ணகபிரமாஸ்திரத்தை விட்டேன்
நலமற்றுநீங்களுயிர் சாகத்தானே.

பொது வசனம்.

இந்திரசித்துவிட்ட பிரமாஸ்திரத்தால் லட்சுமணப்பெருமாள் முதல் சேனைகளெல்லாம் இறந்துபோக, அதைக்கண்ட ராமர் புலம்புகிற விதங்காண்க.

## இராமர் புலம்பல் தரு.

ஐயோதம்பிலட்சுமணஐயோ என்னசெய்வேன்
கையுங்காலும்நடுக்கங் காணுதெங்கேவுய்வேன்

பிரமாஸ்திரங்கொடுத்த பிரமாபழியைவாங்க
திறமாகவேசென்ருயோ திகில்பட்டேங்க

தந்தைதசரதராஜன் தனக்குச்சொல்ல
விந்தையுடனென்னை வெறுத்துசென்ருயோமெல்ல

காய்கனிகள்கொடுத்து கார்த்தாயெந்தனைதம்பி
மாய்வேனயோதிக்கு மறுத்துப்போவேனேவெம்பி

சடாயுடனேதந்தை சாகசீதையும்போக
படாதபாடும்பட்டு பரதவித்தேனேநோக

நீமாளயென்னுயிர் போகும்பரதன்கேழ்க்கில்
தான்மாளுவான்தாய்மார் தானேமடிவார்பார்க்கில் ஐ

## பொது வசனம்.

இறந்துவிட்ட இளையபெருமாள்மேல் இராமர் விழுந்து மூர்ச்சையாகிவிட, இந்த விஷயத்தை தூதுவர்கள் ராவணனுக்குத் தெரிவிக்க, இராவணன் சந்தோஷித்து சீதையம்மனை புஷ்பவிமானத்திலேற்றிக்கொண்டு போய் ராமர் முதலோர் இறந்த படுகளத்தைக் காட்டும்படி தூதுவப் பெண்களுக்கு தெரிவிக்க, அவ்விதமே யுத்தகளத்தைக் காட்ட சீதை புலம்புகிற விதங்காண்க.

## சீதையம்மன் புலம்பல் கவி.

திங்கள்நேர்முகத்தினுளே திரிச்சடைமாதேயம்மா
சங்கரன்செயலோயீது சண்டாளயிந்திரசித்தால்
மங்கிவானரங்களோடே மைத்துனரிறந்தாரையோ
நங்கையேயினியெப்போது நான்கண்டுபேசப்போறேன்.

## சீதையம்மன் ரூபகம்.

அம்மாதிரிச்சடையே அடிவயரெறியுதையோ
பெம்மான்செயலிதுவோ பெண்பிறந்தகொள்ளையோதான்
கைக்கெட்டியவாய்க்கெட்டாத தர்மவிதிக்கென்னசெய்வேன்
தையல்சிறைமீட்டாயென்று தானிருந்தேன்மைத்துனரே.

## திரிச்சடை ரூபகம்.

ஏதுக்குவருந்துகின்ருய் என்னைப்பெற்றதாயேசீதா
தீதுவருகாதுனக்கு தெய்வந்துணைசெய்யுமம்மா
மாயமான்மாரீசனென்று மறுநாளில்தெரிந்ததுபோல்
பேயுனிந்திரசித்துசண்டை பெரிதல்லநாளைதெரியும்.

சீதையம்மன் ரூபகம்.

தடுத்துமான்பின்போகச்சொன்ன தையல்முகம்பாரேனென்று
படுத்துக்கண்ணைமூடிக்கொண்டு பரலோகமடைந்திரோதான்
தருமமேஜெயம்பெருமாள் தானேதுணையென்பதுபோல்
பொருமையுள்ளமைத்துனரே போனீரோயெந்தனைவிட்டு.

திரிச்சடை ரூபகம்.

அரிராமர்லட்சுமணரை அரக்கன்ஜெயித்தால்சண்டை
பரிவாயென்னுள்ளங்கையில் பாவைமுடிப்பேன்கொண்டை
அனுமானடுமைசெய்ய அவதிவருமோஞானம்
தானுவாயுன்கற்புக்கெட்டால் தாங்குமோபுஷ்பவிமானம்.

சீதையம்மன் அனுமாருக்குப் புலம்பல் தரு.

அப்பாயெந்தன்கண்ணேபொன்னே அனுமந்தராயா
எப்போவுன்னைக்காண்பேன் ராமர்க்கேவல்செய்நேயா
மூச்சுங்காணேன்பேச்சுங்காணேன் முகம்வாடலாச்சே
ஆச்சியென்றுஅழைத்தவாய்கை அசைவற்றுப்போச்சே
கடலைத்தாண்டிகணையாழியைக் களிப்பாய்க்கொடுத்தாயே
கணப்பொழுதினில்இலங்கைநகரை கரியயெரித்தாயே
மைத்துனன்மேல்என்கணவன் மயங்கிசாகவே
வைத்தாய்கயிலையீசனே வங்கிஷம்போகவே

பொது வசனம்.

சீதையம்மன் புலம்பிக்கொண்டிருக்கின்ற சமயத்தில் சாம்பு வந்தரும் அனுமாரும் மூர்ச்சைத் தெளிந்து எழுந்திருக்க, அதன் பின்பு சாம்புவந்தர் சொற்படி அனுமார் சஞ்சீவி பர்வதத்தை தூக்கி வருகிற விதங்காண்க.

அனுமார் சஞ்சீவி பர்வதத்தை தூக்கிவருகிற சவி.

கண்டனுமான்சாம்புவந்தர் வார்த்தைக்கேட்டு
கற்சித்துயிருதோளும் உயரத்தூக்கி
அண்டகோளகங்கள்முட்ட விஸ்வரூபம்
ஆங்காரத்துடனெடுத்து அமரர்வாழ்த்த
கொண்டவிடிபோலதட்டி உக்கிரமோடு
கொக்கரித்துசஞ்சீவி மலையைத்தூக்க
தெண்டனிட்டுராமரிரு பாதம்போற்றி
தெற்கிருந்துவடதிசையில் பாய்கின்ருனே.

நொண்டிச்சிந்து.

பாய்ந்தானே அனுமந்தன் - சஞ்சீவி - பர்வதத்தைத் தூக்கிவர ஆக்ரமத்துடன் - சாய்ந்தானேபூமிதன்னை - உதைத்து • ஜாடிவாலில்

வீரகணிகூடியடிக்க - என்தகப்பன்வாய்வுராஜன்-விசையிலும்-எட்டு பங்கு அதிகமாய் - திட்டெனப்பாய்வேன் - மன்னியமரங்கள்செடிகள் பிடுங்குண்டோட - மைக்கடல் - சுவரசொர்க்கத்தோர்கள்பிதிர- இலங்கைவிட்டொன்பதாயிரம் - யோசனை - இமயகிரியைத்தாண்டி இந்தப்படியே - ஏமகூடத்தைத்தாண்டி - அப்பால் - எகிரி நிஷதகிரி தன்னையுந்தாண்டி-தங்கமலைவெள்ளியங்கிரி-தாண்டி-தாவி யதர்க்கப்பால் வைகுந்தமுந்தாண்டி - நீலமலைக்கண்டதனை - பேர்த்தெறிந்து- நிற்காமல்பாய்ந்து சஞ்சீவிமலையை - வேறுடன்பேர்த்தெடுக்க-அடித்துத்தாத்திமலையை - தூக்கி - அரிராமர் யுத்தகளந்தன்னில் வரவே- மருந்துமலையின்வாடை - படவே - மயங்கிநித்திரைசெய்து யெழுந்தவர்போல் - எழுந்திட யனுமந்தன் - கண்டு-எம்பெருமான்பாதத்தில்- பணிந்தனனே-தந்தனம்.

பொது வசனம்.

அனுமந்தன் கொண்டுவந்த சஞ்சீவி பர்வதத்தினல் சகலரும் உயிர்பெற்று எழுந்துவிட அனுமார் அந்தமலையை முன்னிருந்த இடத்திலேபோய் விழும்படி தூக்கியெறிய இந்திரசித்து ஒரு ராக்ஷதனை மாயா சீதையாக்கி மேல்கோபுரவாசலில் கொண்டுவந்து வெட்ட இராமர்கண்டு புலம்ப விபீஷணர் அசோகவனத்தில் சீதையம்மன் யிருப்பதையும் இந்திரசித்து நிகும்பலையாகம்செய்ய போய் விட்டதையும் தெரிவிக்க அக்காலையில் இந்திரசித்து நிகும்பலையாகம் செய்வது காண்க.

இந்திரசித்து நிகும்பலையாகம் செய்வது பண்ராகம்.

பத்துலக்ஷம் அரக்கர்களை பத்திரமாய்காவல்வைத்து
சத்திசிவமாகாளி சங்கரியைமுன்னமைத்து

கொத்துவடம்பலபணிகள் கொண்ணைமலர்தன்னைசாத்தி
வெற்றிதரும்நிகும்பலையாம் வேழ்வியெனும்யாகமதை

தொட்டுதீபதூபஞ்செய்து தொல்லையர்கண்மூடி
விட்டுவரும்சுவாசமதை விளங்கிடவேசுழியில்வைத்து

கட்டிநவவாசலிலுங் கதவடைத்துராமர்படை
பட்டுவிடமனமடக்கி பரிந்துயாகம்துவக்கினனே.

பொது வசனம்.

இராமசுவாமி உத்திரவின்படி அனுமார் இந்திரசித்து நிகும்பலை யாகத்தை அழிக்கப்போகிற விதங்காண்க.

அனுமார் நிகும்பலையாகத்தை அழிக்கப்போவது தரு.

துஷ்டப்பையல்இந்திரசித்து தடர்ந்துசெய்யும்யாகமதை
கஷ்டம்செய்து யுதைத்தொழிப்பேனே-அவனைகையால்

கசக்கியாகந் தனையழிப்பேனே
ஓங்கியொருகுத்தாய்குத்தி உயரதூக்கியெறிந்து
ஆங்காரத்தினல்கடிப்பேனே அவன்கழுத்தை
ஆர்வந்தாலும் உயிர்குடிப்பேனே துஷ்

அனுமார் தரு.

இந்திரசித்தே புறப்படடா-மந்திரம்
ஏன்ஜெபிக்கிருய் விட்டுவிடடா

தந்திரமாய்யிலங்கைக்கு தானேபோக்குக்காட்டி
தானெனுங்கொர்வத்தால் வந்தாயோகாமாட்டி
தடியானீவைத்திடுங் கொடியராக்ஷதரை
மடியக்கையால்குத்தி பொடிபொடியாக்கினேன் இந்

இந்திரசித்து தரு.

நிகும்பலையாகத்தை குலைத்தாயே-எந்தன்
நிஷ்டையைவீணுகக் கலைத்தாயே

புகுந்தேனுந்தனைக்கொல்ல புதர்விட்டசிங்கம்போல்
புரட்டுத்தனத்தையென்முன் காட்டாதேதங்கம்போல்
புத்தியில்லாமலே கத்துங்குரங்கேவுன்னை
சித்தங்கலங்கிட மொத்தியேவாட்டுவேன் நிகு

அனுமார் தரு.

என்தாய்போல்ஒருத்தியைக் கொன்ருயே-அயோத்திக்கு
ஏகிசண்டை சென்ருயே

பந்தல்யலைந்தவனே பரதனைவென்ருயோ
பவுஷில்லாதவனே சத்துருக்கனைவென்ருயோ
பட்டிமகனேவுன்னைக் கட்டியென்வாலாலே
சிட்டிகைநேரத்தில் திட்டெனவாட்டுவேன் என்

இந்திரசித்து தரு.

கொல்லுவேன்பாரென்றுக் கூறியே-கையைக்
கொட்டிசிரிக்கின்ருய் மீறியே

வல்லவனுன்னைப்போல் வந்தாலுங்கோடியே
வதைக்கயெனக்குத்திர முண்டடாஜாடியே
வோடிக்காடுகளிலே ஓடிக்காய்கனிதின்று
கூடிமரங்கிளையில் நாடித்தூங்கிடபோடா கொ

பொது வசனம்.

அனுமாரும் இந்திரசித்தும் ஒருவர்க்கொருவர் தோற்காமல் சண்டைசெய்ய அதனைக்கண்ட லட்சுமணர் இந்திரசித்துடன் சண்டைசெய்கிற விதங்காண்க.

லட்சுமணர் தரு.

பாணத்தையெடடா இந்திரசித்தே
பதறிமேல் விடடா
வேணதந்திரங்காட்டி விட்டுசெய்தாயேபூசை
வெட்கங்கெட்டுஒளித்த உனக்கேன்முகத்தில்மீசை பா

இந்திரசித்து தரு.

கொல்லுவேன் வாடாலட்சுமணு
குதிக்காதே மூடா
வல்லத்தவஞ்செய்து வாங்கியபாணத்தை
அல்லலில்லாமலே ஆட்டிவிட்டேனிதோ கொ

லட்சுமணர் தரு.

எதிர்பாணத்தாலே உனது அம்பை
இரண்டாக்கி மேலே
பதித்தகிரீடகவசம் பளபளன்றுதிரவே
பருத்தமேருகிரி கிடுகிடென்றதிரவே எதி

இந்திரசித்து தரு.

காட்டினில்நின்று கந்தமூலத்தை
கரும்பைப்போல் தின்று
மேட்டில்உறங்குநீயோ தாட்டீகம்பேசுருய்
மேவாதுலட்சுமணு ஆகாதுதுன்கையாலே கா

பொது வசனம்.

இந்திரசித்து லட்சுமணனேடு யுத்தஞ்செய்து தோல்வியடைந்து அருகில் நின்ற சிற்றப்பனுகிய விபீஷணரை வயிற்றெரிச்சலாலே பலவாறு திட்டி தந்தையாகிய இராவணேஸ்வரனிடம் போய் முறையிட்டு என்னுல் அந்த மானிடரை ஜெயிக்கமுடியாதென்று கூற, இராவணன் இந்திரசித்தை உதாசினித்து சண்டைக்குப் போகும்படிச் சொல்ல, மூன்றுவிசை யுத்தம்செய்தேன்; நாலாமுறை யுத்தம் எப்படி முடியுமோவென்று தேரேறிக்கொண்டு லட்சுமணனேடு யுத்தம் செய்கிற விதங்காண்க.

இந்திரசித்து அகவல் கந்தார்த்தம்.

வாடாலட்சுமணு வல்லமையாலே
ஏடாகூடமாய் எதிர்மொழியுரைக்குராய்
உருளவேகுரங்குகள் ஒருசரம்விட்டேன்
பிரளுதேரத்தப் பெருங்கடல்பாரடா
ஆதிமாலயன்சிவன் ஆகியமூவரும்

கோதிலாசேஷனுங் குலவியவுனைப்போல்
கோடானகோடிபேர் கோபமேகொண்டு
மூடாயெதிர்க்கினு முடியுமோகொல்ல
பதினன்குவருஷம் பசிக்கியுண்ணமல்
கனிவாகநித்திரை கடந்தவன்கையால்
இறப்பாயென்று எனக்குமேபிரமன்
மறப்பிலாவார்த்தை மகிழ்ந்துதந்திருக்க
மதிமறந்தேண்டா பேசுருய்லட்சுமண
விதிகிழிந்ததோ ஏசுருய்

கதித்தஅம்புருத்தூணியும் கைவில்லையும்முறித்தினேன்
கணைக்குக்கணைதொடுத்து ஐண்டுரெண்டாய்தரித்தேன் கதி

லட்சுமணர் கந்தார்த்தம்.

வேதத்தின்வுண்மை விளங்கவேசொல்வேன்
ஆதிமாலயன்சிவன் ஆகியமூவரும்
தசரதாராமனுய் தானவதரித்துதாய்
வசனித்தமொழிபோல் வனவாசம்செய்ய
காட்டினில்திரிந்து கபடராக்ஷதரை
வாட்டுவேனென்றுமே வாய்மொழியாக
அண்டர்மாமுனியோர்க்கு அபயாஸ்தந்தந்து
உண்டதுமெய்யாகில் ஓங்கியயானும்
அண்ணன்தன்வார்த்தைக்கு அடங்கியிருந்து
கண்ணுறங்காமல் கடும்பசிநீக்கி
ஊழியம்செய்தது உண்மையாயிருக்கில்
ஆழியாம்சக்கரம் அரக்கன்தலையை

அறுக்கயெடுத்து விடுத்தேன்-இந்திரசித்தன்
திருக்குகளெல்லாங் கெடுத்தேன்

உருக்குவெண்ணெய்போல் ரத்தார்வோடத்தலையறுந்து
நெருக்குண்டுதேவர்மலர் தூவயெங்கும்நிறைந்து

பொது வசனம்.

இந்திரசித்து இறந்தசேதியை சுகசாரணர்கள் இராவணனுக்கு தெரிவிக்க, இலங்கேசன் புலம்பிக்கொண்டிருப்பதை தூதுவப்பெண்கள் மண்டோதரிக்குச் சொல்ல, அதுகேட்டு மண்டோதரி வருவது.

மண்டோதரி வருகிற கந்தார்த்தம்.

இந்திரசித்தெனும் என்னிடபாலகன்
இறந்ததாய்தூதுவ பெண்கள்சொல்ல
அந்தமாம்முகமதில் அரைந்துதன்கையினல் ...

அடிவயர்குபீல்குபீ லென்றுபற்ற
சுந்திரமண்டோதரி சோங்கிபூமியில்வீழ்ந்து
சோகநித்திரையாகி துடித்தெழுந்து
தந்திரபாங்கிமார் தாவிசூழ்ந்திடமாது

தாண்டிதாண்டியேநடந்தாள்—கணவன்பக்கல்
வேண்டிசொல்லவேதுடர்ந்தாள்

ஏண்டிசகிமார்களே எந்தன்பின்னூலேவாடி
இறந்தயிந்திரசித்தை இப்போகாணலாந்தேடி தா

மண்டோதரி சொல் கவி.

இலங்கைமாநகரையாளும் ஈடிலாபிராணநாதா
துலங்கியவுமதுதேவி துணையடிபோற்றிபோற்றி.

இராவணன் புலம்பல் கவி.

மங்கைமண்டோதரியே கேளாய்பெண்ணே
மானிடராம்ராம லட்சுமணன்கையாலே
துங்கனும்யிந்திரசித்து மடிந்தானென்று
தூதர்சொல்லபுத்திர வாஞ்சகத்தினுலே
அங்கமதுபதரிமனந் திடுக்கிட்டேங்கி
அழுதுவுனக்கறிவித்தேன் அய்யோதேவி
இங்குமகன்தனைகாண்ப தெப்போநாமும்
ஏங்குதேபெருமூச்சு வாங்கலாச்சே.

மண்டோதரி புலம்பல்.

பாலாபதறிமாண்டாயோ பற்றுதேவயிர்-பாலா
சீலாயெந்தன்வயிற்றில் ஜென்மித்தபழியிதோ
நாலாவித்தையுங்கற்று நரன்கையால்சாகலாமோ பாலா

மண்ணில்பிறந்தவுடனே உன்குரல்கேட்டு-மண்ணி
குண்ணிமேகங்கள்கீழே கூச்சலிட்டுவிழுந்து
நண்ணிநடுநடுங்கும் நற்கீர்த்திபாழாய்ப்போச்சே பாலா

கோளுங்குண்டுணிபேச்சும் இந்திரசித்தே-கோளு
நாளுஞ்சொல்லிவுள்ளத்தை ஆளும்பிள்ளையைக்கொல்ல
மூளுவித்தானேபாவி தேளைப்போல்விஷமேற்றி பாலா

இச்சகம்பேசுவோர்வார்த்தையை இன்பத்துடனே-இச்
மெச்சியுன்தந்தைராவணன் மைச்சினன்விபீஷணர்வார்த்தை
துற்சமாகநினைத்து அச்சங்காட்டிவோட்டினரே பாலா

வசனம்.

சரணம் சரணம் பிராணேசா! இனிமேலாகிலும் சீதையம்மனை இராமரிடத்தில் கொண்டுபோய் விட்டுவிட்டு சுகப்படும் மன்னவா.

இராவணன் கோபித்தல் தரு.

போபோபயித்தியக்காரி பெண்கள்
புத்தியைக்கேட்பது உத்தமர்க்காகுமோ போ

தோர்ப்புங்கெலிப்பு துணையோவொருவர்க்கு
நாப்புக்காட்டவேண்டாம் நாடிவீடேகுவாய் போ

மண்டோதரி சொல்கிற தரு.

ஏகினல்சாகுவீர் மன்ன-அதை
இப்போதுரைத்திட்டேன் முன்னள்

ஆகிலும்சோமுகா சூரனுமவர்கையால்
அய்யோமடிந்தான் பொய்யேநான்சொல்வது ஏகி

இராவணன் சொல்கிற தரு.

சொல்லும்வார்த்தைவெகு நேர்த்தி-உலகில்
சூதாகவார்த்தையை மாத்தி

கல்மனமுள்ளங் கணவராயிருந்தாலும்
வல்லமையால்தன் வசமாக்குவார்பெண்கள் சொல்

மண்டோதரி சொல்கிற தரு.

பெண்ணென்றல்யெல்லோரும் பெண்ணு-எந்தன்
பேச்சைக்கேள் மன்னவானண்ணு
அன்றுமணஞ்செய்த அரசனையேமாற்றி
மண்ணில்பலரைக்கூடும் மாதர்போலெண்ணுதீர் பெண்

இராவணன் வசனம்.

கேளும் பெண்ணே மண்டோதரி உன் வார்த்தையைக் கேழ்க்கமாட்டேன் இராமன்மேல் சண்டைக்குப் போவது நிச்சயம் மாளிகைக்குப் போவாய் மண்டோதரி.

இராவணனை மகோதரன் கலைத்தல் வசனம்.

இராஜாதிராஜனுகிய இராவணேஸ்வரனே கேளும் நமக்கு துனைக்காரணமான மூலபலமிருக்க வருத்தப் படுவானேன் இக்ஷணமே இராமன்மேல் மூலபலத்தை அனுப்பிவையும் சுவாமி.

இராவணன் வசனம்.

அடாவாடா தூதுவர்களே நமது மூலபல ராக்ஷதரை அழைத்து வாருங்கள் ஏவலாளர்களே.

மூலபலராக்ஷதர் கவி.

திக்கெல்லாம்புகழ்படைத்த தீரன்ராவணனழைக்க
கொக்கரித்ததட்டிவீரங் கூறிமூவுலகோரஞ்ச
அக்கினிபொறிபறக்க ஆவெனவாய்திறந்து
முக்கியமானமூலபல முட்டிவருகுதுபாரீர்.

மூலபலராக்ஷதர் சிந்து.

மூலபலராக்ஷதரும்நாமே-ஆகா - மூவுலகோர்தனைதின்று-ஏப்பமிடுவோமே - ஆலகாலருத்திரன்போல்சீற - இந்த - அண்டமும் நடுநடுங்கவீரபாஷைகூறி - கடலேழையுங்குடித்துவிடுவோம் - உக்கிரகைவாளுவேலுலக்கை கால்தண்டங்கொடுவோம் - சதகோடி நவகண்டத்துள்ளே - எங்கள்சாமிராவணனைப்போல் ஆருண்டுவிள்ளே ஐந்துமுகமும்ஐம்பதுமுகமும் - ஐந்நூறுஆயிரம் அளவில்லாமுகமும்- சந்திரனைத்தொட்ட நீண்டகரமும் - சிவன்சத்திமாலயனை வாயில் போட்டுக்-கொள்ளுந்திறமும்அலைபோலே நாக்குகளைநீட்டி-ஹாகா அதட்டியேமேருகிரிபோல் மூக்கைகாட்டி - இருகண்ணில்பொறி பறந்தோட-எங்கள்-இருண்டமயிருங்கோறதந்தங்களாட. தந்தனம்.

இராவணனைத் துதிக்கும் கவி.

அதிபதிராவணேசா அண்ணலேவுமக்கிப்போது
எதிரியாய்யார்வந்தார்கள் ஏனழைத்திட்டீரெம்மை
மதிதடுமாருவானேன் மலர்முகங்கருத்ததென்ன
கொதிக்குதுவயிர்பசிக்கக் கொள்ளுவோங்கூறுவீரே

இராவணன் சொல்கிற கவி.

ஆபத்துவந்தபோது ஆதரித்திடுவீரென்று
காபந்துசெய்துவும்மை காத்துரக்ஷித்துவந்தேன்
பாபத்துக்கஞ்சராமன் பகைத்தென்னையொழிக்கவந்தான்
கோபத்தோடவனைக்கொன்று கூறுவீரெனக்குத்தானே.

இராமருக்கும் மூலராக்ஷதாளுக்கும் சண்டை.

கந்தார்த்தம்.

வல்லவனென்றுயிங்கே வந்திடும்ராமாநீயும்
புல்லடாயெங்களுக்கு போர்செய்யதிறமுண்டானல்
நில்லடாயறைக்ஷணத்தில் நீயெமபுரியேபோகக்
கொல்லுவோங் கையினுலே

குத்துவோம் காலைவாரி
சுத்துவோம் மூடா

கத்தும்ஆந்தைப்போலே கண்காட்டிமுழிக்காதே
புத்தின்யீசலைப்போலே புறப்பட்டோம்பழிக்காதே குத்

இராமர் சிந்து.

மூலபல ராக்ஷதர்களே - வாருங்கள் - முடிக்குரேனுங்களை நொடிக்குமுன்னே - காலகாலருத்திரன்போலே கோபமீறி - கையி னில்கோதண்ட மெடுத்தனனே. தந்தனம்.

மூலபலம் சிந்து.

சம்புமன்னுரணகஸ்தனே - கும்பகர்னுசாடுவோம் யிடும்பனே அகம்பனே வாடா - தெம்புடைய கும்பன்நிகும்ப அதிகாயனே- தெண்டுவாளினுலிவனை-துண்டஞ்செய்குவோம்.

இராமர் சிந்து.

தலைவேறுகைவேறு - கால்வேருக-தத்தளிக்கவேபுடைத்தேன் ருத்திரன்போலே - தலைமதிசிவந்திடவே - ரத்தாறுகள்-கதித்தோட களிபோய்கவந்தின்னவே. மூல

மூலபலராக்ஷதர் சிந்து.

முச்சிரத்தாக்கன்சங்கனே - குருதிக்கண்ணு - முடிகிவரவச்சிர தெந்தாபருதிக்கண்ணு - அச்சமென்னுராக்ஷதசிங்கா - ராமனை ஆட்டு வோம் ஒன்ருகக்கூடி-வாட்டுவோம் வாரீர்.

இராமர் மோகனஸ்திரம் விடுகிற
கந்தார்த்தம்.

பகையாளிராவணனும் அனுப்பிவைத்த
பலமிருந்தமூலபலம் தன்னையிப்போ
வகையாககொல்லவே முடியாதென்று
வளர்கையில்கோதண்டந் தனையெடுத்து
புகையெழும்பயிருவிழியி லதட்டிமீறி
பூமியோடாகாயந் தத்தளிக்க
நகைத்துமே மோகனஸ்திரத்தைப்பூட்டி
நான்விடுத்தேனே-மூலபலத்தை
தான்கொடுத்தேனே
வான்புகழ்யிவன்ராமன் அவன்ராமன்வென்று
மான்போல்மதிமிரண்டு மயங்கராக்ஷதர்கண்டு

மூலபலம் ஒருவருக்கொருவர் வெட்டிமடியுதல்
சிந்து.

அண்ணுயிவன்ராமன்தாண்டா - வெட்டடா - ஆகாயிவன்ராம னடா - நானும்வெட்டுறேன்-பக்சத்தில்வந்தவன்-ராமன்தான்கொல்

லடா - படுபாவிநீதான்ராமன் - பதைக்கக்கொன்றேன் - உன்முகத் தில்நாமமென்னடா - ராமாநில்லு - ஓகோமூடா-நீயல்லவோராமன் நில்லடா - அங்குராமன் இங்குராமன் எங்குராமன் - அவனுமிவனைக் கொல்ல இவன் அவனைக்கொல்லவே-இப்படியாக சேனையெல்லாங்- கொள்ளைகொள்ளையாய்மடிய வள்ளல்ராமரும் - ஆலிலைமேல்பள்ளி கொண்டாப்போல் - யுத்தகளத்தில்-அரிராமர் நகைத்துமேவீற்றிருந் தார்-தந்தனம்.

பொது வசனம்.

மூலபலம் இறந்தசேதியை இராவணன்கேட்டு கோபங் கொண்டு ராமர்மேல் சண்டைசெய்யப்போகிற விதங்காண்க.

இராவணன் ரதமேறிக்கொண்டு சண்டைக்குப் போகையில் சகுனம் காணுகிற தரு.

மந்திரிமகோதரனே ம்காரதத்தில்குதிரை
மறித்துப்பின்வாங்குவதென்ன சொல்வாய்

மகோதரன் சொல்கிற தரு.

சொல்வதென்னகுதிரை சூலைநோயால்காலை
சுளிக்கிப்பின்வாங்குதையா சுவாமி

இராவணன் சொல்கிற தரு.

தோள்வளைசரியுதே மாலைகள்கரியுதே
சுடர்வாள்மழுங்குதென்ன மந்திரி

மகோதரன் சொல்கிற தரு.

நாள்பட்டதிந்தமாலை தேன்வற்றியபூவிது
நயமில்லாயிரும்பு வாளையா

இராவணன் சொல் தரு.

நாய்நரிகத்துதே பேய்வந்துசுத்துதே
நஞ்சுபோல்மண்மாரி பெய்வதேனோ

மகோதரன் சொல் தரு.

உம்மால்ராமர்படை ஒழிந்தால்தின்னநாய்நரி
ஊளையிடுதுவானம் ஓட்டைசுவாமி

பொது வசனம்.

மகோதரன் இராவணன் மனதைத்தேற்றி தேரின்மேல் நிறுத்தி விட்டு தான்தனித்து ராமர்மேல் சண்டைசெய்கிற விதங்காண்க.

## மகோதரனுக்கும் இராமருக்கும் சண்டை.

### மகோதரன் கவி.

வந்தெங்கள்சேனைதன்னை வாட்டியராமாவாடா
அந்தமாய்உன்னைக்கொன்று அலகைநாய்கழுகுதின்ன
விந்தையாய்செய்யாவிட்டால் வீரராவணனார்மந்திரி
தந்திரமகோதரனென்றென்னை தலமெலாந்துதிக்குமோசொல்.

### இராமர் சொல்லுகிற தரு.

துடுக்குடன்கோதண்டம் எடுக்குரேன்கையினில்
துண்டாநீநில்லு ராக்ஷதவண்டாநீநில்லு
படுக்குப்படுக்கென்றிதோ பாணங்கள்வருகுது

பதறிநீபோகாதே தலைசிதறிநீசாகாதே
பஞ்சப்பயலேவுந்தன் வஞ்சகத்தனமெல்லாம்
கொஞ்சநாழிகைக்குள்ளே மிஞ்சியடிக்குரேன்பார்

### மகோதரன் தரு.

மிஞ்சியராமாவுன் நெஞ்செலும்பைத்தூளாய்
மீறியடிக்குரேன்பார்பூமியில் வாரியடிக்குரேன்பார்
கஞ்சன்மால்சிவன் கண்டெனைவணங்குவார்

கசடாநீயெதிரோ எனக்குமுசடாநீயெதிரோ
காலதண்டமுடனே சூலஞ்சந்திராயுதமும்
ஆலகாலம்போல்சீறி மேலேவிடுத்தனடா

### இராமர் சொல்லுகிற தரு.

அனுகூலசத்திராதியாகி ராவணன்படை
அனைத்தையுங்கெடுத்தாயேராக்ஷதர் இனத்தையுமுடித்தாயே
புனுகுபூனைபோல் பதிங்கியடிக்கடிக்கு

போதித்தாய்கெடுநீதிஅடாபாவி வாதித்தாய்புகழோதி
பூரிப்பாய்யெனைஜெயிக்க பாரியதேரின்மீதேறி
வீரியமாய்வந்தவுன்னை சீரியேவதைக்குரேன்பார்

### மகோதரன் தரு.

வதைக்குரேனென்றவாயை சிதைக்கக்கோடானகோடி
வாள்கெதைசூலமெடுத்தேன்வில்லை தோள்மட்டுமிழுத்துவிடுத்தேன்
அதைக்குந்திபாவளி ஆட்டுக்கடாவைப்போலே

அலறியேமுழிக்காதேபயந்துமே நலங்கெட்டுபழிக்காதே
ஆட்டினேன்குரங்குகளை வாட்டினேன்மூட்டுபூச்சிபோல்
கூட்டித்தலையறுக்கக் காட்டினேன்வாடா

இராமர் சொல் கந்தார்த்தம்.

உண்டவன்வீட்டில் ரெண்டகம்செய்த
உலுத்தனே யுந்தனையிப்போ
மண்டையுஞ்சிதா கொடிகுடைகாலால்
மகாரதம்சாரதிக்குதிரை
துண்டமாய்வுன்பின் வந்தராக்ஷதரும்
தூள்படகோபமேமீறி
அண்டர்களிக்க அரம்பையராட

அறுத்தேன் தலையைபாரடா—மகோதரனே
மறுத்துப்பேசாதேநேரடா

பருத்தவுடல்துடித்து பாயும்ரத்தாரோட
கருத்தாய்பிரண்டுருண்டு கடலில்போய்வீழ்குதுபார்

பொது வசனம்.

இராமபிரான் கோதண்டத்தினால் மகோதரன் இறந்த விஷயத்தை இராவணன் கேட்டு ராமர்மேல் சண்டைசெய்கிற விதங் காண்க.

இராமருக்கும் இராவணனுக்கும் கடைசிநாளில் யுத்தம்.

இராவணன் கந்தார்த்தம்.

மந்திரிதன்னைக்கொன்ற மானிடராமாவுன்னை
சிந்துசிந்தாகவெட்டி ஜீவனைகுடிக்காவிட்டால்
முந்துநான்மறைகள்வாழ்த்து மூவுலகோர்க்குவீரன்
தந்திரராவணனென்றென்னை

தான்சொல்லுவாரோசொல்லடா—சிறுபூனைப்போல்
என்நிற்கின்றாய்நீ நில்லடா

கூன்குரங்கும்பருத்த கோணக்குரங்கைகூட்டி
கொண்டுவந்தாயோசண்டை செய்துக்கொல்லகாமாட்டி தா

இராமர் சொல்லுகிற தரு.

தேரின்மீதேறிவந்திடுராவண தீரனே-உந்தன்
தீய்க்குணமுன்னமே தெரிந்தேன்பாரடாவீரனே

ஓரிக்குருவியைப்போல் ஒண்டியானாயோயைங்கரனே
உன்னிடகெருவம்தன்னை விடடாகெம்பீரனே
உயுத்தம்செய்துயெந்தனை வெற்றிபெறுவோமென்று

தத்திக்குதித்துவந்த புத்தியில்லாதவனே
தவிடுபொடியாக்குரேன் எமன்பதிக்கு
தானேசேர்க்கப் பார்க்குரேன்
தாவியயெழுகடலுங் கூவியேகொதிப்பதுபோல்
ஆவியைவாங்கவேகோபம் மேவிவந்ததெனக்கிப்போதே

இராவணன் சொல்கிற தரு.

அண்டத்தின்முகடு பிளந்துகிலேகெட ஆட்டியே
அளவில்லாதபாண வில்லினில்தொடுத்தேன்பூட்டியே
மண்டலம்பிளவாய் விண்டுரெண்டாகவேநாட்டியே
மனிதப்பயலே கொல்லுவேன்நில்லடாதாட்டியே
மங்கைபார்வதியிடப் பங்கனுகியசிவன்
இங்கேயெனக்களித்த சிங்காரவாளினுலே

மட்டியேவுந்தனைக்கொல்லுவேன்—பாசக்கயிரால்
கட்டியேயிலங்கைசெல்லுவேன்

மானமும்யீனமுங்கெட்டு தானவரைக்கொல்லவந்த
வானவர்க்குபகாரனே பானஞ்செய்வதுபோலுண்பேன்

இராமர் இராவணனே மடித்தல் கந்தார்த்தம்.

சத்திபாணத்தைவிட்டாய் அனுமார்கைக்குள்
சண்டாளாசிக்கிவிட்டாய் இனியென்செய்வாய்
பத்திசெய்யும்தேவர்களே கார்க்கயானும்
பண்புடையதசரத கவுசலேயம்மைக்கு
புத்திரனுய்பிறந்ததுவே யுண்மையானுல்
புகழானயென்கரத்தில் விளங்குமிந்த
வெற்றிபுரிசக்கரம் ராவணன்கழுத்தை

வீரிட்டறுக்கத்தொடுத்தேன்—ராமமந்திரம்
கூறிக்களித்துவிடுத்தேன்

பாரில்தேவர்கள் மலர்பரித்துவாறியிரைக்க
பகைவிட்டுதென்றுயாரும் பண்பாய்கரங்குவிக்க வீரி

இராமர் சொல்கிற வசனம்.

கேளுமப்பா அனுமந்தா ராவணசம்மாரம் முடிந்துவிட்டபடியால் அசோகவனத்திலிருக்கும் சீதாங்கனியை அழைத்துவாரும் பாலகா.

அனுமார் அசோகவனம் போகிற தரு.

ஆனந்தசந்தோஷமாகி அனுமான்யெகிரித்தாண்டியே
வானுள்ளோர்பூமாரிபெய்ய வாலேகுரிக்கியெமங்கானே

குதித்துக்குதித்துநகைத்துநகைத்துக் குளிரத்தாண்டிநடந்துமே
பதித்துப்பதித்துராமசுவாமிபாதம் போற்றித்துடந்தானே
சொன்னசபதம்தன்னைஜெயித்த சுகத்தையெண்ணியெண்ணியே
அன்னையாம்ஜானகிவாழும் அசோகவனத்தில்வந்தானே
மங்களம்மங்களந்தாயே மங்களம்நமக்குமே
தங்களிடபாதந்தன்னில் தாசனநுமான்வந்தனம்-ஆன

சீதையம்மன் சொல்கிற வசனம்.

வாரும்வாரும் அனுமந்தா! நீ என்றும் சுகமாய் வாழ்குவாய் எழுந்திரும் பாலகா.

அனுமார் சொல் கவி.

ஜெயம்ஜெயம்நமக்குத்தாயே சேதியையுரைக்கவந்தேன்
பயமதுவிட்டுதம்மா பாவிராவணனிறந்தான்
துயரத்தையினிவையாதே துலங்கியராமமூர்த்தி
குலவிடயழைத்தாரும்மை கூடபின்வருவாய்தாயே.

சீதையம்மன் சொல்கிற தரு.

மெய்தானுமெய்தானுமெய்தானு ராவணன்மாண்டதுமெய்தானு
மெய்தானுராவணன்மாண்டதுஅய்யா அனுமந்தராயா
பையவேசிரஞ்சீவியாய் வையகத்திலெப்போதும்வாழ்வாய்-மெ

அனுமார் சொல்கிற தரு.

உண்மைதான்வுண்மைதான் ஓகோயெந்தன்தாயேசீதா
உண்மையையுரைப்பதல்லால் ஓதுவேனேபொய்யம்மணி
எண்ணமுந்தெரிந்திருந்தும் ஏன்சோதிக்குறுய்பெண்மணி-உண்

சீதையம்மன் சொல்கிற தரு.

ஆராலேஆராலேஆராலே ராவணன்மாண்டான்
ஆராலேசண்டாளன்மாண்டான் சோராதேசொல்லுவாய்பாலா
தோராதுயெந்தன்மனது சீராகநீசொல்லாவிட்டால்

அனுமார் சொல்கிற தரு.

ஸ்ரீராமர்ஸ்ரீராமர்ஸ்ரீராமர் கோதண்டத்தாலே-ஸ்ரீராமர்
ஸ்ரீராமர்சக்கரத்தாலே செத்துவிட்டான்ராவணனும்
மாராப்புகழ்யிந்திரசித்தை மடிந்தார்லட்சுமணரம்மா-சீதை

சீதை ராமரைத் துதிக்கிற தரு.

அண்டர்களிடுக்கந்தீர்க்க கொண்டல்ராவணனைக்கொன்ற
ஆதியேபரஞ் சோதியே

கண்டேன்கண்டேன்கண்டேனுந்தன் காலடிசெந்தாமரையை
கன்னியேசீதை உன்னியே

இராமர் சொல்கிற தரு.

சித்திரஜனகன்பெற்ற சீதாங்கனியே
சிதருதேமனம் பதருதே
வெற்றிசேரயோத்தியினில் விற்றிருந்தாலிந்தகெதி
வீருமோவந்து நேருமோ

சீதையம்மன் சொல்கிற தரு.

நேருமென்றுவுரைத்தநாதா ஆருக்குந்தெரியாதோவுந்தன்
நேற்றியே ஞானமூர்த்தியே
வாருனமயோத்தினும்வளர் நகர்க்குச்சென்றிடுவோம்
வண்மையேயிது உண்மையே

லட்சுமணர் சொல்கிற தரு.

அண்ணனிடதேவியான ஆதிலட்சுமியென்தாயே
அணிந்தேனேபாதம் பணிந்தேனே
உண்மையைப்பிடித்ததினுல் உன்னைதொட்டராக்கன்மா
[ண்டான்
உத்தமியம்மா உத்தமி

பொது வசனம்.

இராமபிரான் உத்தரவின்படி விபீஷணருக்கு இலங்காபுரியை பட்டங்கட்டிவைத்து சீதாங்கனியம்மனை அக்கினியில் குளிக்கச் செய்து தந்தையாகிய தசரதராஜனும் தேவர்களும் புஷ்பமாரிபெய்ய வசந்தன் கொண்டுவந்த புஷ்பவிமானத்தில் யாவரும் ஏறிக்கொண்டு பரத்துவாசர் ஆசீர்மஞ்சென்று அவர் அளித்த போஜனத்தை அனு மாருடன் ஓர் இலையில் சாப்பிட்டு அக்கினியில் விழும் பரதனுக்கு ஆசிகூறி யாவரும் அயோத்தியில் சந்தோஷித்திருக்கையில் ராம ருக்கு முடிசூட்டும்படி வதிஷ்டரை நினைக்க வதிஷ்ட மகாமுனி வருகிற விதங்காண்க.

வதிஷ்டர் வருகிற கவி.

கதிர்குலராமனுக்குகளிப்புடன் முடிதரிக்க
துதிபுரிந்திமையோர்வாழ்த்த துலங்கியபுலித்தோல்பூண்டு
விதியுடன்சடை துலங்க வீசுமாத்திரைகோலேந்தி
வதிஷ்டமாமுனியயோத்தி வருகின்றார்வருகின்றாரே.

வதிஷ்டர் வருகிற தரு.

வளரும்சூரியக்குல வள்ளல்தசரதன்குரு
வதிஷ்டமகாமுனிநானே அருந்தபஸ்-வதி

களங்கமற்றகாவிகாம்பர கமண்டலங்கையிலேந்தி
விளங்கும்ருத்ராக்ஷந்துன்னவே தகதகென்று-விள

அஷ்டமாசித்தியைவென்று ஆதிசிவன்யென்னுடைய
இஷ்டம்போல்வருகசெய்குவேன் அடிக்கடிக்கு-இஷ்

கைகைமொழியாலேராமன் காட்டுக்குச்சென்றவனிப்போ
பையவேயயோத்திவந்தாஞ ஆகாசந்தோஷம்-பை

வையமன்னர்நடுநடுங்க வளரமுடிதரிப்பேன்
அய்யமுண்டோயெந்தன்வார்த்தைக்கு அகிலத்துள்ளே-அய்

இராமர் முதலானோர் துதித்தல் தரு.

வந்தனம்வந்தனம்முனியே உமக்கனேக வந்

வந்தனம்தசரதனர் தந்திடும்பாலர்முதலோர்
இந்தவேளையெங்களை சிந்தைகளித்தாளும் வந்

சுந்திரா ஆசீர்வாதம் ராமச்சந்திரா ஆசீர்வாதம்
கொந்தார்குழலியான கோதைசீதையேவாழி
அந்தமுடனேயென்னை அழைத்தவிபரஞ்சொல்வீர்

பரதன் சத்துருக்கர் கவி.

கதிர்குலந்தழைக்கவந்த கடவுள்மாமுனியேபோற்றி
பதிபுகழ்ராமருக்கு பன்னரும்முடிதரிக்க
அதிதுரிதங்களாக அழைத்திட்டோமுன்னைசுவாமி
மதிதடுமாறிடாமல் மகிழ்ந்துடன்நடத்துவீரே.



இராமருக்கு முடிதரித்தல் தரு.

திருமுடிக்கொண்டாரே ஸ்ரீராமச்சந்திரர்-திரு
திருமுடிக்கொண்டாரே தேவதேவர்கள்வாழ்த்த
திரண்டயரசர்முடி காலடிமேல்தாழ்த்த
மருவில்லாயரம்பையர் மகிழ்ந்துசோபனம்பாட
மன்னன்தசரதனூர் மைந்தனென்றுகொண்டாட திரு

பரதச்சத்துருக்கரும் பரிந்துக்குடைபிடிக்க
பலபலவாத்தியம் பேரிகையுமடிக்க
சிரம்வணங்கியனுமான் சேவடிதொட்டேத்த
சித்திரஜானகியம்மன் பக்தியுடனேபோற்ற திரு

அருமையாய்லட்சுமணன் ஆலவட்டங்கள்வீச
அய்யன்புகழைசாம்புவந்த ரன்பாய்பேச
கருணைபெறசுக்ரீபன் விபீஷணர்கரங்குவிக்க
களிப்பாயங்கதன்நளன் கருதிதோத்தரிக்க திரு

அரிமந்திரஞ்ஜெபித்து அந்தணர்முடிவிரிக்க
அதனைவதிஷ்டர்ராமன் அணிமுடியில்தரிக்க
பரிவாய்யெங்கிலும்வானோர் பரிந்துமலரிறைக்க
பகவான்யயோத்தியில் பண்பாய் அரசிருக்க திரு

இந்நாடகம் பாடி முடிந்தகாலமும், இயற்றியவர்பேரும்.

கவி.

ஆண்டுராக்ஷசதிங்களாங் கும்பந்திகதியோ
டானயிருபத் தெட்டினில்
அடர்காரிவாரநக்ஷத்ர ரோகணிதிதி
யானசப்தமி யோகமோ
வேண்டுசித்தாதியில் வெங்கதிர்குலத்தில்வரு
வேளிராகவன் புரிந்த
விளங்குராமாயண உயுத்தியகாண்டத்தையே
விரிதமிழில் நாடகமதாய்
தூண்டாவிளக்கைநாகந் தூக்கணும்பாக்கமெனும்
துய்யநகர் மீதில்வாசன்

துகளிலாகாந்தமா ரிஷிகோத்ரன்பாவாடை
துய்யசுதனு யுதித்தோன்
பாண்டுரங்கன்பதம்பணிபவன் மாலாம்பிகையை
பரவியனுதினந் துதிப்போன்
பாவலர்க்கன்பன் நடேசதாசனுமிதை
பாடினனுலகில் மாதோ.

வாழி வாழி வாழி வாழியே.

இராவண சம்மார நாடகம்

முற்றிற்று.

---




திருமகள்விலாச அச்சியந்திரசாலை, சென்னை:—1940.

